உ

நடேசன் துணை.

# கடைவள்ளலார் காலம்.

இந்நூல்:

சென்னை, மைசூர் ஸர்வகலாசங்கங்களின் அங்கத்தினரும்
சென்னை ஸர்வகலாசங்கத்தின் இந்துதேச சரித்திர ஆசிரியரும்
'இந்தியாவின் பூர்வசரித்திரம்,' 'தென்னிந்திய சரித்திரத்
தொடக்கம்' முதலிய நூல்களியற்றியவருமான

**Rao Sahib: S. கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார்**

M.A., Ph. D.

அவர்களால் ஆக்கப்பெற்றது.




செந்தமிழ்ப் பிரசுரம்—௪௯.

தமிழ்ச்சங்க முத்திராசாலைப் பதிப்பு

1924.

உ

கடவுள் துணை.

# கடைவள்ளலர் காலம்

இந்நூல்:

சென்னை, மைசூர் ஸர்வகலாசங்கங்களின் அங்கத்தினரும்
சென்னை ஸர்வகலாசங்கத்தின் இந்துதேச சரித்திர ஆசிரியரும்
'இந்தியாவின் பூர்வசரித்திரம்,' 'தென்னிந்திய சரித்திரத்
தொடக்கம்' முதலிய நூல்களியற்றியவருமான

**Rao Sahib: S.** கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார்
M.A., Ph. D.

அவர்களால் ஆக்கப்பெற்றது.




செந்தமிழ்ப் பிரசுரம்—௪௯.

தமிழ்ச்சங்க முத்திராசாலைப் பதிப்பு.

1924.

# முகவுரை.

இற்றைக்குச்சற்றேறக்குறைய இருபத்தைந்து வருடங்களுக்கு முன் லண்டன்நகரத்தினின்று வெளிவரும் மும்மாதத்திய பத்திரிகையான "ஏஷ்யாடிக் க்வார்டர்லிரிவியூ" என்னும் பத்திரிகை வாயிலாய் "மாணிக்கவாசகர்காலம்" என்னும் அரிய ஆராய்ச்சி வியாசம் ஒன்று வெளிவந்தது. இவ்வியாசத்தை யெழுதினவர் சென்னை முக்கிய நியாய மன்றத்தின் நியாயஸ்தாநாதிபதிகளில் ஒருவரும், சர்வகலாசங்கத்தின் அத்தியக்ஷருமாய்விளங்கி இளைப்பாறியிருந்த இன்னிஸ் என்னும் பெரியார். அவர் ஆராய்ச்சிமுகமாய்வெளியிட்ட சிலகொள்கைகள் ஆராய்ச்சிமுறைக்குச் சற்றுமாறுபட்டிருப்பனவாய்த்தெரிந்து அவைகளுக்கு மறுதலைமுடிவு ஒன்று என்னால் வெளியிடப்பட்டது. அதுமுதல் அவருக்கும் எனக்கும் நேர்ந்த பழக்கத்தாலும், அவர்கள் அடிக்கடி யெழுதிய கடிதத்தூண்டுகோலாலும் பின்வரும் வியாசத்தை ஆங்கிலத்தில் எழுதி இற்றைக்கு இருபது வருஷங்களுக்குமுன் வெளியிட்டேன். அப்பெரியோர் அதை முழுவதும் அங்கீகரித்ததோடு இவ்வித ஆராய்ச்சியைப் பூர்த்திசெய்யவேண்டுமென்னுங் கடப்பாட்டை யெளியேன் மேலேற்றி மேனுலகஞ்சென்றனர்.

இது இப்போது நடந்துவரும் மதுரைத்தமிழ்ச்சங்கத்தை நற்றுயாய் நின்று வளர்த்துவந்த மகா-ா-ா-ஸ்ரீ பாலவநத்தம் ஜமீந்தார் பாண்டித்துரைத் தேவரவர்கள் வேண்டுகோளுக்கிணங்கி சங்கத்தின் ஐந்தாம் வருஷோற்சவகாலத்தில் மஹாமஹோபாத்தியாய ஸ்ரீ. வே. சாமிநாதையரவர்கள் அக்கிராஸனராயமைந்த அவையில் அரங்கேறிற்று. இச்சின்னூலுக்கு வாய்த்த இப்பெருமை விஷயகம்பீரத்தினாலேயேயன்றி யென் சிறுமுயற்சியினாலென்பது சிறிதும் தகாது.

தமிழ்ப்பயிற்சி செய்யப்புகுவோர்க்கு அதன் வளர்ச்சிமுறைதெரிய வேண்டியது அவசியம் என்பது சொல்லாமலே விளங்கும். அம்முறை தெரியவேண்டுமேயானால் கொஞ்சம் சரித்திரப்பயிற்சியோடு ஒட்டிப் போனாற்றான் நூலுணர்ச்சிபயன்பெறும். இப்பொழுது நமக்குக்கிடைத்த மட்டில் இலக்கியங்களையாராய்ந்து நோக்குமளவிற் சங்கச்செய்யுள்களே முற்பட்டனவென்பது எல்லோருக்குமொப்ப முடிந்ததாயிருப்பினும், எக்காலத்தில் எவ்விதமான தேசநிலைமையில் இத்தமிழ்வளர்ச்சியுண்டாயிற்றென்று துணிந்து சொல்வது எளிதன்று. இதையாராய்ந்து தெளிந்தறிய் இவ்விலக்கியங்களே போதியசான்றுகளாவேனும், அவைகளை

முன்னிட்டே இவ்வாராய்ச்சி பயன்படவேண்டுமென்பதற்கையமில்லை. இச் சிறு நூலில் யாம் செய்யப்புகுந்ததும் இவ்வாராய்ச்சியேதான். எப்படியென்றால், தமிழ்நாட்டின் நாகரிகநிலைமையைப்பற்றி இவ்விலக்கியங்களிற் பொதிந்துகிடக்கும் விஷயங்களை ஆய்ந்தெடுத்து ஒருங்குபடுத்தியறியமுயன்றால் தமிழர்நாகரிகநிலைமை ஒருவாறு அறியப்படும். இதினின்றும் பொதுவாய் நாம் ஊகித்தறியக்கூடியவிஷயங்கள் பலவுள. இவைகளை நமக்குக்கிடைக்கும் வெளியாதாரங்களைக்கொண்டு நிலைநிறுத்திக்கொள்ளுதல் முடியாமையன்று.

மேற்கூறியவாறு புறநானூறு முதலிய சங்கச் செய்யுள்களினின்றுமாராய்ந்தெடுத்து ஒருகோவையாக நிறுத்தப்பெற்ற விஷயங்களடங்கிய இச்சிறுநூல் இந்நோக்கத்தையுடையதே. சங்கச்செய்யுள்களில் நிலைபெற்ற கவிவாணரையும், வள்ளன்மார்களையும் ஏககாலத்திலல்லாது ஒவ்வொரு தலைமுறையில் நின்றவர்களாகவாவது பகுத்துநோக்குமிடத்து, மூன்றாவது சங்கத்தினரென்று தொன்றுதொட்டு வழங்கிவரும் நாற்பத்தொன்பதின்மரிலனேகர் ஏறக்குறைய சமகாலத்தவராகக்காணக்கிடப்பர். இதினின்றும், மூன்றாஞ்சங்கம் நிலவியிருந்திருத்தல்கூடும் என்று ஊகிக்கவிடமுண்டாகும். இவர்களோடு சமகாலத்தவராய் நின்ற வரசர்களின் செய்திகளையும், அக்காலத்திய நாகரிகநிலைமையையும், தேசத்தின் பாகுபாட்டையுமொருங்கேதிரட்டியெடுத்து இத்தகைய நிலைமையைத்தெரிவிக்கும் அயல்நாட்டுச்சாதனங்கள் கிடைப்பவைகளோடொப்பநோக்கி ஆராயுமிடத்து ஒரு காலவரையறுப்புக்கிடனுண்டாகக்கூடும். இவ்வாறு நம்சங்கச்செய்யுள்களையாய்ந்தெடுத்து, மேற்றேசத்தினின்றும் வாணிகவாயிலாய்வந்துபோனசில கிரேக்கர் முதலியோர் பதிந்துவைத்த குறிப்புக்களுடன் ஒப்பிட்டுப்பார்ப்போமாயின் சங்கப்புலவர்பாடல்களும் அம்மேல்நாட்டு வியாபாரச்செழிப்பும் ஒரேகாலத்திய நிகழ்ச்சிகளாயிருந்திருக்கவேண்டுமென்பது தெளிவாய் விளங்கும்.

இப்பொதுநோக்கத்தை விளக்கி ஒன்றிரண்டுதனிச்செய்திகளையே கொண்டாராய்ந்து பார்ப்போமாயினிக்கொள்கையேசரியென்பது ஐயமற விளங்கும். முடியுடைவேந்தர் மூவர்களாகிய சோழ பாண்டிய சேர அரசர்களின் ராஜதானிகளைப்போலவே காஞ்சியும் பேராண்களமைந்த பெரிய அரசிருக்கையாயிக்காலத்தில் நிலைபெற்றிருந்ததென்பது சங்கநூல்களினின்றேநன்குபுலப்படும். ஆயின் சங்கச்செய்யுள்களில் கச்சிமாநகரின்

பிரஸ்தாபம்வரும்போதொருசந்தர்ப்பத்திலாவது கல்வெட்டு செப்பேடு களானறியக்கிடைக்குமரசர்கள் இந்நகரிலாண்டசெய்தியைப்பற்றிய குறிப்புக்கிடைத்திலது. தொண்டைநாட்டின் முதற்பட்டினமாயும், சோழராது ஆட்சியிலடங்கியதாயும் ஒருக்கால் 'இளந்திரையனாட்சியிலிருந்ததாயும் புலப்படுவதன்றிப் பல்லவவரசர்வம்சாவளியிலடங்கியவரசர்களிலொருவரையாவது சுட்டிக்கூறவில்லை. இப்பல்லவராஜ்யம் ஏறக்குறைய நான்காம்நூற்றாண்டிலாரம்பித்துப் பத்தாம்நூற்றாண்டின் முதல்வரைக்கும் செழித்தோங்கியதென்று சரித்திரவாராய்ச்சியால் நன்குவிளங்கும் ஆகையால், சங்கநிகழ்ச்சி பல்லவவெழுச்சிக்குமுற்பட்டதாயிருந்திருத்தல் வேண்டுமென்பது வெள்ளிடைமலையாயிற்று.

தவிர, ஒருகாலத்தில் கரிகால்வளவன் இலங்கையின்மேற் படையெடுத்துச்சென்று அரசபீடாகிய அநுராதாபுரத்தைக்கொள்ளைகொண்டு அதனின்றும் பன்னீராயிரந்தொழிலாளரைக்கொணர்ந்துகாவிரிவேலைசெய்வித்ததாகவும், இச்செய்தியைப்பின்னறிந்தகஜபாகுவென்னுமீழத்தரசன் சோழதேயத்துக்குச்சென்று அவர்களை மீட்டும்கொணர்ந்ததாகவும் ஈழத்தியபழையமகாவம்சம் சொல்லாநின்றது. இப்பழைய மகாவம்சமென்பது கிறிஸ்துவுக்குப்பின் மூன்றாம்நூற்றாண்டிலரசுகட்டிலேறிய மகாஸேனன்காலத்தில் முதல்முதல் எழுதப்பெற்றுப்பிறகு ஆறாம்நூற்றாண்டில்விரிவுபெற்றதென்பது எல்லோருமறிந்தவிஷயமே. ஆகையால் இக்கயவாகுவின் ஆட்சிக்காலம் கி. பி. மூன்றாம் நூற்றாண்டுக்கு முந்தியதென்பது வெளிப்படையாம். இம்மகாவம்சத்தில் குறிப்பிட்டகாலநிலைமை நிர்ணயமாய்த்தீர்மானிக்கப் போதியசாதனங்களின்றி ஒருவாறுமயங்கிக்கிடப்பதால் இக்கயவாகு கி. பி. முதலல்லது இரண்டாவது நூற்றாண்டில் வதிந்தவனென்று சொல்லலாகுமேயன்றி இக்காலத்தியவனென்று வரையறுத்துக் கூறுதல்சாத்தியமன்று.

இஃதன்றியும் எட்டாம்நூற்றாண்டினிடைப்பகுதியில் வெளிப்போந்த செப்பேடும் இதற்கிணங்கவுறும் பத்தாம் நூற்றாண்டின் இடைப்பிறந்த மற்றொருசெப்பேடும் ஒருங்குபடுத்தியாராய்ந்துணர்வோர்க்கு இக்கொள்கையையேயுறுதிப்படுத்துவனவாகும். இச்செப்பேடுகளால் மஹாபாரதம் தமிழிற்செய்வித்ததும் நிலைபாலங்கானத்துச் செருவென்றதும் மதுரையிற் சங்கம்வைத்ததுமாகிய இச்செய்திகள் மூன்றையும்நிகழ்த்தியபாண்டியர்கள்சென்ற பிற்காலத்தியவர்களாய்க்கொண்டாடப்பட்ட

பாண்டியவம்சம் தலைப்பட்டதாகத்தெரியலாம். இம் முச்செய்திகளையும் நிகழ்த்திய பாண்டியர்கள் வேறுவேறோ அல்லது ஒருவனேயோவென்று ஐயுறுதறியும்படி செப்பேடு தேர்ந்துகூறுமற்போயினும் இவையெல்லா மொருபாண்டியன்செயல்களேயென்றும், அப்பாண்டியன் தலையாலங் கானத்துப் பாண்டியனேயென்றுங் கொள்ளவிடனுண்டு. இப்பாண்டிய னவைக்களத்தையலங்கரித்த தமிழறிஞரிற் சிறந்தோர் நக்கீரரென்பது சங்கச்செய்யுள்களாலே நன்குவிளக்கும். இப்பாண்டியனையே சிறப் பித்து நெடுநல்வாடையையும், இவன் தலையாலங்கானத்து வெற்றியே இணையாகப்பலவேறுசங்கச்செய்யுள்களையுமியற்றியோரிவரேயாவர். இவர் களவியலுரைகண்டபொழுது இவரோடுரைகண்டவர்களுள் மதுரைமருத னிளநாகன் என்பவரும் ஒருவரெனவும், இதற்கு நடுவுரைப்பவராயிருந்த வர் உப்பூரிகுடிகிழான்மகனார் உருத்திரசர்மரென்றும் தொன்றுதொட்டு வந்தகதை யொன்றெல்லோர்க்குந்தெரிந்த விஷயமே. அகநானூறு தொகுத்த ஆற்றலுடையார் இவரேயென்றும், தொகுப்பித்தோன் உக்கிரப்பெருவழுதியென்றும் அதற்குக் காப்புச்செய்யுள்கண்டோர் பாரதம்பாடியபெருந்தேவனாரென்றும் அகநானூற்றுப் பதிகங் கூறும். இப்பரம்பரைச்செய்திகளினின்றும் தலையாலங்கானத்துப்பாண்டியனும் நக்கீரரும், பாரதம்பாடிய பெருந்தேவனாரும் ஒருதலைமுறையில் வதிந்த வரென்பது தனக்குத்தானே விளங்கப்பெறும். இதுசங்கச்செய்யுள் களினின்றுமே வெளிவருமாதாரங்களுக்கும் சாஸனவாராய்ச்சியாற் பெற்ற செப்பேட்டுக்களிற்கண்ட விஷயங்களுக்கும் பொருந்தியிருப்ப தால் வழுவாமல்வந்த கர்ணபரம்பரையேயென்று கொள்ளல்சாலும்.

இவ்வாறு பலவகையாய்ச்சிக்கலாகிய கொள்கையாயிருப்பினும் இக்கொள்கை யெல்லோராலு மங்கீகரிக்கப்பெற்றதாகச் சொல்வதற்குச் சில இடையூறுகள் உள. இவைகளில் முக்கியமாயுள்ளன இச்சங்கநூல் களிற் பொதிந்துகிடக்கும் சோதிடஸம்பந்தமான விஷயங்கள். இவை கள் இருகூறுகக்கவனித்தல் கூடும். முதலாவது, இச்செய்யுள்களில் ஏதேனுமொருபிரஸ்தாபம் 'வாரங்களைப்பற்றியது கிடைத்தால் அச் செய்யுள்செய்தோர் கி. பி. ஆறும்நூற்றாண்டு, அல்லது அதற்குப் பிற் பட்டவராதல் வேண்டுமென்பது. இரண்டாவது, பரிபாடல் பதினோராம் பாட்டில் குறிக்கப்பட்ட கிரஹணகாலவரையறை. இதுசோதிடகணி தத்துக்கிணங்கியதாதலின் இதைக்கணித்தறிதல் சாத்தியமாகலாம்.

இவ்விரண்டில், முதற்கூற்று வாரம் ஏழுதினங்களுக்குரிய கிழமைகள் நந்தேயத்தாரயல்நாட்டினின்றுமறிந்துபெற்றதென்றும், அது கிரேக்கரிடமிருந்து நமக்குவந்தது ஐந்தாம் நூற்றாண்டிற்றானென்றும் சொல்வர். இதற்குமுக்கியமானவாதாரங்களுள் ஞாயிற்றுக்கிழமை முதலாயிருப்பதொன்று. இவ்வாறிருப்பதற்குச் சோதிடவாதாரம் ஒரு சிறிதும் இல்லை. கிரிஸ்துமதம் ஐரோப்பாவில் பிராபல்யத்துக்கு வந்தபிற்பாடு இது அங்கீகரிக்கப்பட்டது என்பர். இக்கொள்கையையங்கீகரிக்குமுன் தெரியவேண்டியவிஷயங்களிரண்டுண்டு. இவைகளில், வாரம் ஏற்படுத்தியது சோதிடசாஸ்திரிகளின் உபயோகத்துக்காகவேயென்பது தெரியப்படவேண்டும். அப்படியாயின், கிரிஸ்துமதத்தை யநுஸரித்து மாறுபாட்டை சோதிடசாஸ்திரக்காரர் எடுத்தாளவேண்டிய காரணமென்னவென்றாராய்ந்து காட்டவேண்டியது. இவ்விருவிஷயங்களையும் நிரூபித்துக்காட்டப்போதிய சான்றுகள் கிடைத்தில.

ஆதித்தியவாரம் என்பதைப் பட்டாரகவார மென்று பழைய நூலாகிய பஞ்சதந்திரத்தில் காணக்கிடக்கிறது என்று லாதித்தியன் கிரகங்களுக்கு ராஜா, அல்லது சிறந்த கிரகமென்பது கொண்டு அப்பெயர் வாரத்தில் முதல்நாளைக்குப் பெயராய் நின்றது என்னலாம். வாரமென்பது ஆட்சியிலிருந்தா லதைச்சோதிட சாஸ்திரிகள் தங்களுக்கியன்றவாறு எடுத்தாள்வதில் தோஷந் தெரியவில்லை. ஆரியபட்டர் சோதிடநூல்எழுதுவதற்கு முந்தியே வியாழக்கிழமை ஆட்சியிலிருந்ததென்றும், அக்காலத்திலேயே சோதிடப் பயிற்சி சிறந்துவிளங்கியதென்றும் சாஸனங்களினின்றுமே எடுத்துக் காட்டமுடியும். இதுவுமன்றி, இப்போது வெளியிடப்பட்ட பரிபாடல் பதினொன்றாவது பாட்டில் காணப்பெறும் [redacted]கிரஹணம் நிகழ்ந்த காலத்தை சோதிடரீதிபாகக்கணித்து அக்காலத்தில்தான் அப்பரிபாடல் ஆக்கியோரிருந்திருத்தல் வேண்டுமென்று தீர்மானிக்கக்கூடியது ஒரு தலை. ஆனால் இப்படிச்செய்யவேண்டிய கணனைக்குவேண்டிய அம்சங்களெல்லாம் சரிவரக் கிடைப்பின் ஐயமின்றி நிச்சயித்தல்கூடும். சில அம்சங்களை வேறுபடுத்திக் குணிக்கநேர்ந்தால் இந்த ஆதாரத்தையே தாணிந்தெடுத்ததற்கேற்ப கொள்கையை நிலைநிறுத்த முயல்வது சித்தியடையாது. இப்பாட்டிற்கண்ட கிரகநிலைகள் சோதிடசாஸ்திரத்துக்கிணங்கியவைகளாய்த் தோன்றவில்லையென்றும், அதையாக்கியோர் கணிதநிலை தெரிந்தவரல்லரென்றும் கொள்வாருமுளர். ஜர்மனிதேசத்திய ஆசிரியர் யாக்கோபியென்பவர் மழை பெரும்பெயல்வருவதற்கு

வேண்டிய கிரகநிலைகளைக்குறிக்க முயன்றவர் சோதிடசாஸ்திரத்துக்கு விரோதமானநிலைகளில் சிலவற்றை நிலைபெறச்செய்தனரென்றுஞ் சொல்லுவர். அஃதற்றன்று. சோதிடஞானமுடைய பெரியோராலெழுதப்பட்டதேயப்பாட்டு; அது பரம்பரையாய்வழக்கில் வரும் குணிதத்திற்கிணங்கியிருக்கிறதென்று சிலர் கொள்வர். இவ்வாறு அபிப்பிராயபேதங்களுக் கிடங்கொடுக்குங்காறும் இதன்முடிபு இவ்வாறென்று சொல்லவியலாது. இதைவிட்டு இதர சாதனங்களைக்கொண்டே ஆராய்ச்சிசெய்ய வேண்டுமென்பது திண்ணம்.

இவ்வாற்றானன்றி இச்சோதிடக்கொள்கைக்கிணங்கிய காலக்குறிப்பையே யங்கீகரிப்போமேயாயின், பரிபாடல் பதினொன்றாம்பாட்டை யெழுதிய பெரியோரும், அவரோடுடன் வதிந்தவர்களாய்த் தேர்ந்தெடுக்கக்கூடிய மற்றோரும் கி. பி. ஏழாம்நூற்றாண்டிலிருந்தோராவர், சற்றேறக்குறைய அதேகாலத்தில்நிலவிய தேவாரம்பாடிய அப்பர், சம்பந்தரிருவரும் வைணவ ஆழ்வார்களிற் சிலரும் இச்சங்க நூலாளர்க்குச்சமகாலத்தினராவர். மற்றும் சங்கநூற்களினின்று மாராய்ந்தெடுக்கக்கூடிய பலவிஷயங்களுமக்காலச்செய்திகளாகக்கொள்ளவேண்டிவரும். அப்படியாயின் ஏககாலத்திலேயே தமிழர் முன்பின்னான இரண்டுவித நாகரிகத்தை யடைந்தவர்களாயிருந்திருத்தல்வேண்டும். பாஷையின் போக்கும் இக்கொள்கைக்கிணங்காது. ஆகையால் நமக்குக்கிடைக்கும் ஆதாரங்க ளெல்லாவற்றையும்விட்டுக் கிடைக்கக்கூடாத ஆதாரங்களைத்தேடுவது ஆராய்ச்சியாகாது. ஆகையால் மூன்றாம்சங்கம் நிலைபெற்றகாலம் கி. பி. இரண்டுமூன்றாவது நூற்றாண்டுகளேயென்றுகொள்வது இதுவரைக்கும் நமக்குக்கிடைத்த சாதனங்களுக்கிணங்கியகொள்கையாகும்.

குறைநிரம்பிய விச்சிறுவியாசத்தைய‌ச்சிட்டுப் படிப்போர்க்குதவிப் பயன்படுத்தவேண்டுமென்னுமூக்கத்தோடு, சங்கப் பரீக்ஷைகளுக்குப் பாடமாகவேற்படுத்திய சங்கநிர்வாகசபையார்க்கு நன்றிபாராட்டவேண்டிய கடப்பாடுடையவெனக்கு, ஒருசிறிதேனுமிம்முயற்சி அம்மாணாக்கர்களுக்குப் பயன்படுமாயின், என்னுழைப்பு முழுவதும் பயன்பட்டதாகப்பாராட்டி என்னாலியன்றவளவிலின்னோரன்ன ஆராய்ச்சிகளைச்செய்ய முயல்வேன்.

ராக்கோட்டை கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார்.



# *கடைவள்ளலார் காலம்.



நம் தென்னிந்திய சரித்திரவாராய்ச்சிசெய்வான்புகுவோர்க்கு, வழி துறைபுலப்படாமை இயல்பென்பர். வெறுவாய்ப்பபிற்சிசெய்யப்பெற்றுப் பலவகைத்தான நூல்களையுடையதாகிய நந் தமிழ்ப்பாஷையின்சரித்திர வாராய்ச்சியும் அத்தகையதே. ஆனாலும், சின்னாளாக அரிய பெரு முயற்சியால் வெளிப்படுத்தப்பட்ட சில நூல்களாலும், வேறு ஆராய்ச்சியின்விளைவான பிற சாதனங்கள் சிலவற்றானும் மூன்றுந்தமிழ்ச் சங்கம் சிறப்புற்று விளங்கியகாலம் ஒருவாறு ஊகிக்கக்கூடும். இத் தகைய வூகத்துக்கு இருவிதமான தடைகள் உள. நம் முன்னோர் எழுதிவைத்தநூல்களில் உண்மையும் அன்மையும் பகுத்தறியவியலாத வாறு ஒருமித்திருப்பதொன்று; தவிர இவ்விடயங்களை ஆராய்ச்சிசெய்ய முற்புகுந்த சில பெரியோர்கள் இத்தகைய மயக்கத்தைப்போக்க முயன்றோராயினும் அவற்றை ஆக்கியோரேயாவர்போலும்! ஆயினும், தொன்றுதொட்டுக் கர்ணபரம்பரையாய்வரும் விஷயங்கள் எவ்வளவு உண்மைகளை மறைப்பவையேயாயினும் இவைகளை முன்னிட்டு ஆராய்ச்சி யியல்புக்கிணங்கச் சோதிக்கப்புகின், இம்முயற்சி நன்மையே பயக்கு மென்னும் ஊக்கமேலீட்டால் மேல்வரும் நான்கு கொள்கைகளுக்கியன்ற சாதனங்களில் எம்மாலறியப்பட்ட சில ஈண்டு வெளியிடப்படும்.

(i) தொன்றுதொட்டு வழங்கும் மூன்றுஞ்சங்கமென்னு மொரு கல்விக்கழகம் இருந்திருக்கக்கூடுமென்பதொன்று.

---

*இவ்வியாசம், மதுரைத் தமிழ்ச்சங்கத்து ஐந்தாம்வருஷோற்சவதினங்க ளுள் ஒன்றாகிய 1906-ம் ஞு மே-மீ 25-உ மாலை மஹாமஹோபாத்தியாய ஸ்ரீ: வே. சாமிநாதையரவர்கள் அக்கிராஸனராயிருந்த வித்துவச்சபையிற் படிக்கப்பட்டது.

(ii) இச் சங்கம் மிக வுயர்ந்தநிலைமையிலிருந்தகாலம், சேரன் செங்குட்டுவன்காலமே யென்பது மற்றொன்று.

(iii) இச்செங்குட்டுவன்காலம் இதுகாறும் தெரிந்தமட்டில், கி. பி. இரண்டு அல்லது மூன்றும்நூற்றாண்டாயிருத்தல்வேண்டும்.

(iv) இம்மூன்றுகொள்கைகளும் இன்றுமட்டும் தெரிந்துள்ள நந் தேயச்சரித்திரக்கொள்கைகளுக் கிணங்கியவைகளேயாகும்.

தமிழ் நூல்களில், பண்டைக்காலத்தனவும் அதற்குப் பிற்காலத்தனவுமான சரித்திரநடைபெற்ற சில நூல்களையும் பல்லோரும் அங்கீகரிக்கத்தக்க பழங்கதைகளையுங் கொண்டே இவ்வாராய்ச்சி செய்யப்படும். நம்முன்னோர், தமிழகத்திற் பாண்டிநாட்டில் நடந்தேறிய சங்கங்கள் மூன்றெனபர். இம்மூன்றில் மூன்றாவதொன்றே நம்மாராய்ச்சிக் கிணங்கும். ஆகையால் இவ்வியாசத்திற் சங்கமென்பது மூன்றாஞ் சங்கமேயாம். இச்சங்கப்புலவர்கள் நாற்பத்தொன்பதின்மரென்றும், சங்கம் வளர்த்த பாண்டியர் முடத்திருமாறன்முதலா உக்கிரப்பெருவழுதியீறாக நாற்பதின்மர் என்றும், இவர்களுட் கவியரங்கேறினோர் மூவரென்றும் கூறுவர். இவ்வுக்கிரப்பெருவழுதிமுன்பே திருவள்ளுவர்குறள் அரங்கேறிற்றென்ப. திருக்குறளுடையனார் இச்சங்கத் தங்கத்தினருள் ஒருவரல்லரென்பதும், இன்னோரன்ன பல சான்றோர் வெவ்வேறிடங்களில் வதிந்து வாழ்நாள் வீழ்நாளாகாது விளங்கினரென்பதும் இனித் தெளிவுறுத்தப்படும்.

உக்கிரபாண்டியனை ஊன்றுகோலாகநிறுத்தி அவ்வரசன்காலத்து மன்னரையும், மதியாளரையும் கட்டுக்கதை கடிந்து அக்காலத்தனவாய நூல்களின் உண்ணிலைகொண்டே ஒழுங்குபடுத்த லியலும். ஆயின் முதன்முதல் உக்கிரபாண்டியன்காலத்தவர் வள்ளுவரென்பதை யறிவது இன்றியமையாததாம். திருவள்ளுவமாலையில் உக்கிரபாண்டியன் சாற்றுக்கவி யொன்றிருக்க, ஔவை யென்னும் பெயரோ, புகழ்ப்பெயரோ பெற்ற உடன்பிறந்தாள், நாயனாருக்கிருந்தன ளென்பது அனைவருமறிவர். இக்கல்விக்கரசி இப்பாண்டியனையும் இவன் நண்பராகிய சோழன் ராஜசூயம்வேட்ட பெருநற்கிள்ளியையும், சேரமான் மாவெண்கோவையும் புறப்பாட்டு முந்நூற்றறுபத்தேழில், இவர்கள்பெயர் புலப்படுத்தினோரல்லரேனும் புகழ்ந்துள்ளார். ஐயூர்மூலங்கிழார், உக்கிரப்

பெருவழுதி வேங்கைமார்பனைவென்று கானப்பேரெயில் கைக்கொண்டதைக் கீழ்வருமாறு தெளிவுறுத்துகின்றனர்:—(புறம்—21)

"புலவரை யிறந்த புகழ்சா லோன்ற
னிலவரை யிறந்த குண்டுகண் ணகழி
வான்றோய் வன்ன புரிசை விசும்பின்
மீன்பூத் தன்ன வுருவ ஞாயிற்
கதிர்நுழை கல்லா மரம்பயில் கடிமிளை
யருங்குறும் புடுத்த கானப் பேரெயில்
கருங்கைக் கொல்லன் செந்தீ மாட்டிய
விரும்பு ணீரினு மீட்டற் கரிதென
வேங்கை மார்ப னிரங்க வைகலு
மாடுகொளக் குழைந்த தும்பைப் புலவர்
பாடுதுறை முற்றிய கொற்ற வேந்தே"

புலவரை யிறந்த புகழ்சால் தோன்ற லென்றது, அப்பாண்டியன் பெரும் புகழை வற்புறுத்தும். அகநானூறு தொகுப்பித்தோன் இவனேயாவனென்பர். மதுரைப்புராணத்திலும், திருவிளையாடலிலும் புகலப்பட்ட உக்கிரவன்மனென்பானது சித்திரச்செய்கைகள் சிலப்பதிகாரத்தில்:—

"அடியிற் றன்னள வரசர்க் குணர்த்தி
வடிவே லெறிந்த வான்பகை பொறாது
பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்
குமரிக் கோடுங் கொடுங்கடல் கொள்ள
வடதிசைக் கங்கையு மிமயமுங் கொண்டு
தென்றிசை யாண்ட தென்னவன் வாழி
திங்கட் செல்வன் றிருக்குலம் விளங்கச்
செங்கணா யிரத்தோன் றிறல்விளங் காரம்
பொங்கொளி மார்பிற் பூண்டோன் வாழி
முடிவளை யுடைத்தோன் முதல்வன் சென்னியென்
றிடியுடைப் பெருமழை யெய்தா தேகப்
பிழையா விளையுட் பெருவளஞ் சுரப்ப
மழைபிணித் தாண்ட மன்னவன் வாழ்கெனத்
தீதுதீர் சிறப்பிற் றென்னனை வாழ்த்தி"

என வருதலால் அறியப்படும்.

உக்கிரபாண்டியன் இவ்வாறிருக்க; அருமைமாதாகிய ஔவையை யாதரித்தவள்ளலாருட் பெரும்பேர்படைத்தவர், அதிகமானெடுமானஞ்சி

யும் அவன் செல்வப்புதல்வனாகிய பொகுட்டெழினியு மாவர். இவர்களாண்டநாடு, சேலம் ஜில்லா தர்மபுரிக்குப் பக்கத்துள்ளதென்பது சாஸனவாராய்ச்சியினால்விளக்கப்பெற்றதாயினும், மைசூரி லிப்பொழுதிருக்குந் தகடூரேயாகாதோவென்று சங்கிக்க இடங்கொடுக்கும்படியான தகடூர்நாடென்று புராதனநூல்களால் நன்குபுலப்படும். ஏனெனில், இப்பிராந்தியத்திற் போச்சல விஷ்ணுவர்த்தனன் படைத்தலைவனான புகழ்பெற்ற கங்கராஜன், கி. பி. 1117-ஆம் ஆண்டிற்குமுன் தலைக்காடு தருவான் புகுந்தபோது, அம்மண்டலத்துச் சோழவதிகாரியும் சேனாநாயகனுமாய்வதிந்த அதிகைமான் என்பான் ஒருவனிருந்தானென்பது சாஸனங்களால் நன்குவிளங்கும். ஔவையாரே பாடினதாகச் சொல்லப்பட்டுவரும்புறப்பாட்டுக்களிற் பெரும்பான்மை, அக்காலத்துக் கடைவள்ளல்களிலொருவனாகிய அஞ்சியையே சிறப்பிப்பனவாம். இப்பாட்டுக்களில் அநேகம் தாதையாகிய அ ஞ் சி யை யு ம், அவன்றனயனாகிய எழினியையும் அவரவர்பெயராற் புலப்படுத்தும். புறம்—91-ல்,

"ஆர்கலி நறவி னதியர் கோமான்
போரடு திருவிற் பொலந்தா ரஞ்சி"

என்றும்,

"நீயே தொன்னிலைப்
பெருமலை விடரகத் தருமிசைக் கொண்ட
சிறியிலை நெல்லித் தீங்கனி குறியா
தாத னின்னகத் தடக்கிச்
சாத னீங்க வெமக்கீத் தனையே"

என்றும் பாடியுள்ளார். இச்செய்தியைச் சிறுபாணாற்றுப்படையில்,

"மால்வரைக்
கமழ்பூஞ் சாரற் கவினிய நெல்லி
யமிழ்துவிளை தீங்கனி யௌவைக் கீத்த
வுரவுச்சினங் கனலு மொளிதிகழ் நெடுவே
லரவக் கடற்றானை யதிகனும்"

என்று ஔவையையும் ஒருங்குபடுத்திப் பாடியுள்ளார் நல்லூர் நத்தத்தனார்.—இந்நத்தத்தனாரியற்றிய சிறுபாணாற்றுப்படை, மூவேந்தர் எழுவள்ளலார்களினுஞ் சிறந்தகொடையாளியும், ஆமூர் வேளூராண்களுக்கரசுமாகிய எருமாநாட்டு நல்லியக்கோடனுடைய வள்ளன்மையைப் புனைந்து ஆற்றுப்படுத்துவதாம். புறம்—99-ல் ஔவையார்,

"செருவேட்,
டிமிழ்குரன் முரசி னெழுவரொடு முரணிச்
சென்றமர் கடந்தநின் னாற்றல் தோற்றிய
வன்றும் பாடுநர்க் கரியை யின்றும்
பரணன் பாடினன் மற்கொன் மற்றுநீ
முரண்மிகு கோவலூர் நூறிநின்
னரணடு திகிரி யேந்திய தோளே"

என்பதாற் றனக்கும், பரணருக்கும், அஞ்சிக்குமுண்டான காலப்பொருத்தத்தை விளக்கி, இவ்வாராய்ச்சிக் கின்றியமையாததான சாதனமொன்றை யமைத்துள்ளார்.

பரணர் என்பவர், சங்கத்து நாற்பத்தொன்பதின்மரி லொருவராயும், புறநானூற்றில் அனேக பாடல்களுக் காசிரியராயும் விளங்குவதன்றி, சங்கத்தொகுப்புக்களி லொன்றாகிய பதிற்றுப்பத்தின் ஐந்தாம்பத்திற் சேரன் செங்குட்டுவனது பெரும்புகழ்பாடிப் பெருமைபாராட்டப்பட்டவராதலால் முற்காலத்தே மிகச்சிறந்த சிறப்புற்றவராயிருந்தனரென்பதற்கு ஆஸ்பதமுண்டு. பதிற்றுப்பத்தில், ஐந்தாம்பத்தின்பதிகத்தாற் செங்குட்டுவனைப் பரணர் பாடியது இனிது விளங்கும். அஃதன்றி, அங்கவர் எழுதியவண்ணமே அக்குட்டுவனிளையோனாகிய இளங்கோவும், சிலப்பதிகாரத்தில், செங்குட்டுவன்பிறப்பையும், செய்திகளையும் விரிவாகக் கூறுகின்றனர். இவ்விரு வரலாற்றைக்கொண்டே, அடியார்க்குநல்லார் சிலப்பதிகாரவுரையில் அவற்றை வரைந்துள்ளார். செங்குட்டுவற்கிளையோன் இளங்கோவென்பதும், செங்குட்டுவனைப் பரணர் பாடினரென்பதும் இதினின்றும் ஐயமின்றியறியலாம். முன்னெடுத்துக்காட்டிய சிறுபாணாற்றுப் படைமேற்கோளினின்றும் ஔவையாருக்கும், அஞ்சிக்குமிருந்த நட்புத்தன்மை நன்குவிளங்கும். தொண்ணூற்றொன்பதாம் புறப்பாட்டினின்றும், அஞ்சியைப் பரணர் சிறப்பித்தனரென்பது வெள்ளிடைமலையாம். ஆதலால், செங்குட்டுவன், அதிகைமானஞ்சி, ஔவை, பரணர் இவர்கள் சமகாலத்தவர், அன்றேல் ஒரேதலைமுறையி லிருந்தவராகவேண்டுமென்பதற் கையமில்லை. அக்காலத்துத் தமிழகத்திற் செங்குட்டுவன் மிகச் சிறப்புற்றோங்கினனென்பது, அக்காலத்திலேயே இயற்றப்பெற்ற இருபெருங்காப்பியங்களாகிய சிலப்பதிகார மணிமேகலைகளால் நன்கு விளங்கும். இக்காலத்து நச்சினார்க்கினிய ரென்பதற்கியன்ற சிறப்புற்ற

மஹாமஹோபாத்தியாய: பண்டித சாமிநாதையரவர்கள் பெருமுயற்சியால் இக்காப்பியங்கள் வெளிப்படுத்தப்பட்டு, முற்காலத்துச் சரித்திர வாராய்ச்சிக்கும், தமிழாராய்ச்சியிடைப்படுமூறுகளை நீக்குவதற்கும் சிறந்த கருவிகளாயுள்ளன. இவ்விரு காப்பியங்களில், சிலப்பதிகாரமியற்றியவர், செங்குட்டுவற் கிளையோராய "நந்தாச் செங்கோ, லந்தமிலின்பத் தரசா ளுரிமை, யிளையோற் குண்டென வுளைவனன் வெகுண், டழுக்காற் றெழுக்கத் திழுக்கு நெஞ்சினன், கண்ணெரி தவழ வண்ணலை நோக்கும், கொங்கவிழ் நெடுந்தார்க் கொடித்தேர்த் தானைச், செங்குட்டுவன்றன் செல்ல னீங்கப், பகல்செய் வாயிற் படியோர் தம்மு, னகலிடப் பார மகல நீக்கிச், சிந்தை செல்லாச் சேணெடுந் தூரத், தந்தமி லின்பத் தரசாள் வேந்தாயினாராய்" வஞ்சிக்குணவாயிலில் வதிந்த இளங்கோவடிகளாவார். சிலப்பதிகாரத்துக்குமுன் னெழுதப்பட்டதாயினும் மணிமேகலைதுறவையே விஷயமாகக்கொண்டதாற் சிலப்பதிகாரத் தொடர்ச்சியாகிய மணிமேகலை, "நன்னூற்புலவன்" 'தண்டமிழாசான்' கூலவாணிகன் சாத்தன் என்னும் புலவர்பெருமானு லியற்றப்பட்டுள்ளது. சங்கத்திலரங்கேற்றுவித்தற்கு வரும் நூல்களிற் பிழைகாணுந்தோறும், ஆக்கியோர்களைக் குற்றங்கூறத்துணியாராய், இந்தப்பிழைகளைக் கேட்கும்படி நேரிட்டதேயென்று மனம் வருந்தித் தமது தலையை எழுத்தாணியினுற் குத்திக்கொள்வரென்றும், அதனுற் றலை புண்பட்டுச் சீயோடிருந்தமையின், இவர் சீத்தலைச்சாத்தனுரென்னு மாறுபெயர் பெற்றுரென்றும் சொல்வர். இக்காப்பியங்களை ஆராயப்புகுமுன் மிக ஆவசியமாயிருக்கிற சிற்சில விஷயங்களைத் தேர்ந்தறிதும்.

சங்கத்து நாற்பத்தொன்பது நல்லோரில் ஒருவராகவழங்கும் நல்லூர் நத்தத்தனுர், சிறுபாணுற்றுப்படையிற்சிறப்பித்த கடைவள்ளல் எழுவருள்,

" கான மஞ்ஞைக்குக் கலிங்கம் நல்கிய
அருந்திற லணங்கின் ஆவியர் பெருமகன்
பெருங்கல் நாடன் பேகன் "

அல்லது வையாவிக்கோப் பெரும்பேகன் ஒருவன். இச்செய்தியையே புறம்—145-ல், பரணர்,

" மடத்தகை மாமயில் பனிக்குமென் றருளிப்
படாஅ மீத்த கெடாஅ நல்லிசைக்
கடாஅ யானைக் கலிமான் பேக "

என்று குறித்துள்ளார். இப்பேகன் ஒருகால் வேறொருத்தி நலனயந்து தன்னில்லக்கிழத்தியாகிய கண்ணகியைத்துறக்க, அவள் காரணமாக அவனைப் பாடினோர் கபிலர், பரணர், அரிசில்கிழார், பெருங்குன்றூர்கிழார் ஆவர். இப்பாடல்கள் ஒத்த பாவமுள்ளவைகளா யிருக்கின்றதுமன்றி, பேகனுற்றுறக்கப்பட்ட கண்ணகியை அவனோடு சேர்ப்பிப்பதே பொருளாகவுமுடையன. புறம்—343-ல், பரணர்,

"மலைத்தாரமுங் கடற்றாரமுந்
தலைப்பெய்து வருநர்க்கீயும்
புனலங் கள்ளின் பொலந்தார்க் குட்டுவன்"

என்று ஒரு குட்டுவனைப் புகழ்ந்துள்ளார்.

கர்ணபரம்பரையில், திருவள்ளுவரது இளையோரெனப்பெற்றுச் சங்கத்தாரில் ஒருவராகப் பாராட்டப்பெற்ற கபிலர்சரிதையைச் சற்று நோக்கின், பறம்புமலைக்கும் முந்நூறு ஊர்களடங்கிய பறம்புநாட்டுக்குமுரிமைபூண்ட வேள்பாரியென்பான் இவருக்குப் பெரிய வேளும், அரிய நண்பனுமாயிருந்ததாகத் தெரிகின்றது. சங்கநூல்களிற் பதிற்றுப்பத்தின் ஏழாம்பத்தும், ஐங்குறுநூற்றிற் குறிஞ்சி நூறும், பத்துப்பாட்டிற் குறிஞ்சிப்பாட்டும், அன்றி, இன்னாநாற்பதும் இவர் ஆக்கியனவென்ப. மூவேந்தருமொருங்குசேர்ந்து முற்றினும், பாரி தோலானுப்பின், சூழ்ச்சியால் வெல்லப்பட்டு இறந்தானாகக் கபிலர் நல்லிசைப்புலமை மெல்லியாாகிய அவ னிருமகளிரையுந் தக்கபடி மணம்புரிவித்துப் பாரியின் நட்பைப் பயன்படுத்தும்வண்ணம் அம்மகளிரை யழைத்துக்கொண்டு பறம்புநாட்டைவிட்டகன்றனர். இவர், இம்மகளிரை மணக்க விச்சிக்கோனையும், புலிகடிமால் இருங்கோவேளையும் முறையேவேண்டி அவர்கள் மறுப்ப வழன்று சீறினர். இச்செய்திகளும், முல்லைக்குப் பாரி தேர்கொடுத்ததும், புறம்—200, 202-ல் நன்கு விளங்கும். புறம்—202-ல் கழாஅத்தலையாரை யிகழ்ந்தமைபற்றி இருங்கோவேளின், சிற்றரையம் பேரரையமென் றிருபாற்பட்ட ஊர் எரிந்துபோனசெய்தி சொல்லப்படுதலன்றி, புறம்—201-ல் இருங்கோவேள்,

"வடபான் முனிவன் றடவினுட் டோன்றி
யுவரா வீகைத் துவரை யாண்டு
நாற்பத் தொன்பது வழிமுறை வந்த, வேளிருள் வேளே"

என்றும் விளிக்கப்படுகின்றான். புலிகடிமால், இருங்கோவேள் என்னும் பெயர்க்குக் காரணம் போச்சலர் தம்பெயர்க்குச் சான்றாகச் சொல்லுங் கதைக்கொப்புடைத்தா யிருக்கின்றது. இஃதன்றிப் பாரியும், வேள் எவ்வியும், நெருங்கிய உறவினரென்பதும், எவ்விக்கும், இருங்கோ வேளுக்கும் ஏதோ ஒருவித சம்பந்தமுண்டென்பதுங் காணப்படு கின்றன. இவ்வாறு நிற்க,

கபிலர், சேரன் மாந்தரஞ்சேரலிரும்பொறையின்காலத்துக்கு முற் பட்டவரென்பது, புறம்—53-ல் பொருந்திலிளங்கீரனார்,

‘செறுத்த செய்யுட் செய்செந் நாவின்
வெறுத்த கேள்வி விளங்குபுகழ்க் கபில
னின்றுள னாயி னன்றுமன்”

என்பதால் நன்குவிளங்கும். (புறம் — 126-ல்) மாறோக்கத்துநப்பசலையார் முள்ளூர்க்குன்றுக்குடையானான மலையமான் திருமுடிக்காரியை,

“நிலமிசைப் பிறந்த மக்கட் கெல்லாம்
புலனழுக் கற்ற வந்த ணாள
னிரந்துசென் மாக்கட் கினியிட னின்றிப்
பரந்திசை நிற்கப் பாடினன்”

என்று கபிலர் புகழ்ந்ததாகக் குறிப்பிட்டிருக்கிறார். இதேபாட்டில்,

“சினமிகு தானை வானவன் குடகடற்
பொலந்தரு நாவா யோட்டிய வவ்வழிப்
பிறர்கலஞ் செல்கலா தனையேம்” — என்றதால்,

அக்காலத்தில் சேரர்கடற்படைத்திறம் நன்கு விளங்குவதுந்தவிர, கபிலர்கவிவன்மை யெத்தகைச்சிறப்புடைத் தென்பதையும் வற் புறுத்தும். இவராலேயே பாடப்பட்ட புறம்—174-ல் முள்ளூர், கபிலாற் புகழப்பட்டதாயும், பகைவர்க்கஞ்சி யவ்வூரில் ஒளித்திருக்குங் கால், பெருவிறற்கிள்ளிக்கு அழியாப் பேருதவி புரிந்த சோழியவேனாதி திருக்கண்ணன் அக்கிள்ளி தன் பெரும்பேற்றைப்பெறச் செய்ததாகவுஞ் செப்பும்.

திருக்கோவலூருக்கும், முள்ளூர்க்குன்றுக்கும் உரியனான மலைய மான் திருமுடிக்காரி யென்பான் மலைநாட்டரசன். கபிலாற் புகழப் பெற்ற வேளிரோரில் ஒருவன். புறம்—121, 122—இப்பாடல்களால் தமிழ்வேந்தர்மூவரும் இவனன்பை நாடினதாகத் தோன்றும்.

மேலெழுதியவாறு, ஔவை கபிலர் பரணரிம்மூவரே முதலாகக் கருதியவிடத்து, ஏனைய அனைய கவிகளும் வள்ளலாரு மொரேதலை முறையில் வாழ்ந்தவராகக் கண்டுள்ளாம். அக்காலத்துத் தமிழ்வள்ளலா ரையும், அவர்நாட்டி னமைதியையும் புகலப்புகுமுன் அக்காலத்துச் சரித்திரவமைதியைச் செங்குட்டுவன்காலத்தனவாகிய விருபெருங் காப்பியங்களினின்று மியன்றவரையில் இயம்புவாம்.

சிலப்பதிகார மணிமேகலைகளானவை யிரண்டுங்கூடி ஒன்றேயாய் நிகழவேண்டி, இளங்கோவடிகளு மவர்நண்பரான ஆசிரியர் கூல வாணிகன்சாத்தனாரும்இயற்றியனவென்பது அனைவருமறிந்தவிஷயமே. அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்குபுருடார்த்தத்தை யும் புகட்டவேண்டியதாகிய இப் பெருங்காப்பியங்களில் முன்னது, அறம் பொரு ளின்பமே புகட்டிநிற்க, பின்னது மணிமேகலை துறவையே சொல்வதாய் முன்னதனுட னொருங்குபட்டு நான்காம் பொருள்பயந்து, ஒரேகாப்பியமாய்நடைபெற வியற்றப்பட்ட தென்னுஞ் செய்தி, அடியார்க்குநல்லாரால் சிலப்பதிகாரப் பதிகவுரையில் மேற்கோள்களோடும் விளங்கக்கூறப்பட்டுள்ளது. இவ்விருகாப்பியங் களும், நம்பற்கரிய தெய்வச்செயல்கள் பலவற்றைக் கொண்டவைக ளாயினும், அக்காலத்தில் வீழ்ந்த அநேகவிஷயங்களை நிகழ்ந்தவாறே புகட்டும்; எனின், போக்கு காப்பியத்தன்மைத்தாயினும், பொருள் சரித்திரத்திற் கிணங்கியதேயாம்.

> "முடிகெழு வேந்தர் மூவர்க்கு முரிய
> தடிகள் நீரே யருளுக"

வென்றதற்கேற்ப, சிலப்பதிகாரம் மூவேந்தரையும்; மணிமேகலை, அவர்களுள், பாண்டியனைநீக்கிக் காஞ்சியரசனுடன் மற்றவரையுஞ் சிறப்பித்துக்கூறுகின்றது. இக்காப்பியங்களில்வழங்குஞ் சோழவரசர் கள், சோழன்கரிகாற்பெருவளத்தானும் நெடுமுடி, வெண்வேல், மாவண் என்னும் அடைகளடுக்கப்பெற்ற கிள்ளியுமேயாவர்.

இவ்விருவரைப்பற்றித் தென்னிந்தியசிலாசாஸனபுஸ்தகங்களில் டாக்டர் ஹூல்ஷ் (Doctor Hultzsch) என்பவர் பின்வருமாறு வரைந்துள்ளார்;—"பூர்வீகச்சோழமன்னர்கள் குலமுறையையும் அவர் செய்திகளையுங்கூறும் நான்குபட்டயங்களும் வெவ்வேறுமுறையாகக்

கூறுவதைக் காணலாம். இந்நால்வரில் ஒருவனான கோக்கிள்ளியென் பானை மனிதத்தன்மையனாகச் சொல்லவியலாது; ஏனெனில், நாகபட்டினத்துப் பிலஞ்சென்று நாககன்னிகையொருத்தியை மணந்தானென்பதாலும், விக்கிரமசோழனுலாவில், சிபி, கவேர னென்னுங் கதைத் தன்மையே பொருந்திய, இருசோழமன்னர்க்கு முன்வைக்கப்பெற்றுள்ளதாலும்;" கரிகாலன் கோச்செங்கணானைப்பற்றி, அப்பண்டிதரே அடியில்வருமாறு புகன்றுள்ளார் :—"ஒன்றற்கொன்று முரண்படுமிக் கூற்றுக்களை யொப்பிட்டுநோக்குமிடத்து, மேற்கூறிய முதன்மூன்றுபத்திரங்கள் வரையப்பட்டகாலத்து, இவர்கள் எவ்வரிசையில் வதிந்தனரென்பதற்குத் தொன்றுதொட்டுவந்த சான்று யாதுமின்றுபோலும்! ஒருகால் அவ்விருவருடையபெயரும், களவழி பட்டினப்பாலைபோன்ற முற்காலத்திய சிறப்புக்கவிகளாலேயே, அவர்கட்குத் தெரிந்திருத்தல் வேண்டும். அவர்களை, நமக்குக் கிடைத்திருக்கும் சாஸனங்களால் நன்குவிளங்கும் சோழபரம்பரையாரின்வம்சத்தில், முன்வந்தோரென்பது தவறாம். சோழதேசத்தையாண்டு நசித்துப்போன அரசவம்சத்தினராய், தங்கள் சிறந்தசெயல்களினாலோ அல்லது தற்செயலாலோ தமிழ்ப்பாவலரால், தங் கவிகளி னிறுவப்பெற்று, அவ்வமிசத்தாரைக் குறிப்பிக்குஞ் சிலராவரென்பது ஒக்கும். காவிரிநதிக்குக் கரைகட்டியவன் கரிகாலனென்று லெயிடன்சாஸனங் கூறும். கலிங்கத்துப்பரணியிலும், விக்கிரமசோழனுலாவிலு மிச்செய்தி குறிக்கப்பட்டுள்ளது. கலிங்கத்துப்பரணி, பாலைபாடியோற்குப் பதினாறுலக்கம்பொன் பரிசளித்த கரிகாலனென்றுங் கூறும். முடத்தாமக்கண்ணியார் பொருநராற்றுப்படையில் இவன் இளஞ்சேட்சென்னியின்புதல்வனென்பர். அப்பாடலில் அவன்பெயர் கரிகால் எனத் தோன்றும். இதற்குக் கருமையான காலென்றும் கரியின்காலென்றும் இருவகைப்பொரு ளுண்டு: ஆயின் வடமொழிப்பெயராய்க்கொள்ளின், யானைகட்குக் கூற்றெனப் பொருள்படும். இவன் சேரபாண்டியர்களை வெண்ணியிற் புறங்கண்டதாகப் புகலும். சிலப்பதிகாரப்படி, இவன் முக்கியநகரம் காவிரிப்பூம்பட்டினம். தென்னிந்தியசரித்திரவாராய்ச்சிவிஷயமாகத் தாம்விடுத்த இன்பம்புகட்டு மாராய்ச்சியொன்றில், கனம்பொருந்திய பி. குமாரஸ்வாமி என்போர் கரிகாலன் கி·பி·முதல் நூற்றுண்டினனென்பர். இக்கொள்கைக் காதாரம் சிலப்பதிகார உரைகளில், கரிகாலன்பெண்

வயிறுவாய்த்தபோனை செங்குட்டுவனுக்கு, இலங்கைக் கயவாகு சம காலத்தவன் என்பதே. அவர் இக்கயவாகு மஹாவம்சத்திற்கண்ட முதற் கயவாகுவேயென்றுதேர்ந்து, இவன் அரசாட்சிக்காலம், கி-பி 135 முதல் என்று முடிப்பர். இவ்விருகயவாகுக்களின் ஒற்றுமையைப் பெயரினாலேமாத்திரமின்றி நூலின் உட்கிடைகொண்ட வேறுகாரணங் களாலே சாதிக்குமளவும், இலங்கையின் புராதனசரித்திரக்காலவரை நன்றாய்ப் பரிசோதிக்கப்படுங்காறும் மேற்சொன்ன குமாரசுவாமியவர் களுடைய புத்திநுட்பத்தை வியந்தவனாயினும், அவர்கொள்கையை அங்கீகரிக்க ஒருப்படேன்."

சிலப்பதிகாரம் புகார்காண்டத்தை ஆழ்ந்து ஆராயுமிடத்து, கோவலன்கதை முதலிற் புகாரையாண்டவன் சோழன் - கரிகாற் பெருவளத்தானென்பது நன்குபுலப்படும். இத்தகைய பெருங்காப் பியத்துக் குரையெழுதுவதற்குவேண்டிய பலவித பாண்டித்தியத்தி னாலுஞ் சிறப்புற்று, ஆன்றோர்வழங்குங் கர்ணபரம்பரையைத் தவறின் றிப்புகட்டும் பெரிய உரையாசிரியராகிய அடியார்க்குநல்லார் அக்காலத் தாண்ட வரசர்க்குக் குறிப்பனவற்றையெல்லாம் கரிகாலன் மேலேற்றிக் கூறுவதே, அக்காலத்துப் புகாரி லாண்டவன் கரிகால னென்பதற்குத் தக்க சான்றாகும். அன்றியும், பெயரினாலேயாவது, அல்லது இமயத்துப் புலிபொறித்த செயலினாலேயாவது வெளிப் படையாய் அவனையே குறிக்கும் கூற்றுச் சிலவு முள.—மங்கல வாழ்த்துக்காதையில் " இப்பா லிமயத் திருத்திய வாள்வேங்கை, யுப் பாலைப் பொற்கோட் டுழையதா—வெப்பாலுஞ், செருமிகு சினவேற் செம்பிய, னொருதனி யாழி யுருட்டுவோ னெனவே " என்பது, புலிபொறித்ததை நன்குபுகட்டுவதன்றி, அக்காலத்தரச னிவனாகி வேண்டுமென்பதையுங் குறிக்கும். இரண்டாவது மனையறம்படுத்த காதையில், 'கரிகாற்பெரும்பெயர்த் திருமாவுளவனைப், பாலைபாடிய பரிசிலன்றெடுத்த' வென்பது ஒரு பிரதியிலிருந்ததென்றதில், கரி காலன்பெயர் வருவதன்றிக் கடலாடுகாதையில், கரிகால னாண்டிருந்த செய்தி " விண்பொரு பெரும்புகழ்க் கரிகால்வளவன், றண்பதங் கொள் ளுந் தலைநாட் போல" என்று மெடுத்து வழங்கியுள்ளதால் விசதமாகும். ஐந்தாங்காதை–80—90–ம் வரிகளில், இக்கரிகாலன்செய்திக ளயைந் துள்ளன. ஆய்ச்சியர்குரவையிற் புகழப்பட்ட மூவேந்தரில் " பொன்

னிமயக் கோட்டுப் புலிபொறித்து மண்ணாண்டான், மன்னன் வளவன் மதிற்புகார் வாழ்வேந்தன்" என்றது, கரிகாலனையே குறிப்பிக்கிற தென்பது தெற்றெனத் தெரியும். சிலப்பதிகாரம் வஞ்சினமாலையில்—

" மாதருரைசான்ற,
மன்னன் கரிகால் வளவன்மகள் வஞ்சிக்கோன்
றன்னைப் புனல்கொள்ளத் தான்புனலின் பின்சென்று
கன்னவி றோளாயோ வென்னக் கடல்வந்து
முன்னிறுத்திக் காட்ட வவனைத் தழீஇக்கொண்டு
பொன்னங் கொடிபோலப் போதந்தாள் "

என்பதனால், சோழன் கரிகாலன்மகள் வஞ்சிக்கோனை மணந்தவளென்பது தெளிவாம்.

ஆயினும் வஞ்சிக்கோன் என்றது, வஞ்சியாசனையன்றென்று, சேர குலத்தனான ஆட்டனத்தி என்பானையென்பது, செந்தமிழ்ப் பத்திரிகையைப் பேரூக்கத்தோடுந் தெளிந்த ஆராய்ச்சியோடும் நடத்திவந்த என் நண்பர், ஸ்ரீமத் - ரா. இராகவையங்காரவர்கள்கொள்கை. செந்தமிழ்த்தொகுதி-2. பகுதி-4 பக்கம்-107—111-ல் 'நல்லிசைப் புலமை மெல்லியலார்' என்னுந் தலைக்குறிப்புள்ள ஆராய்ச்சியில் இக்கொள்கைக்கியன்ற பல சான்றுகளைப் பண்புடன் புகட்டியிருக்கின்றாராயினும், மன்னன் கரிகால்வளவன்மகளே ஆதிமந்தியென்பது தெளிவாகவில்லை. இஃது எற்றாயினும் கரிகாலனே இக்காலத்துப் புகாரில் ஆண்டோனென்பதற்கு மேற்கூறிய சாதனங்களே போதியனவாம். இயற்கைச்செய்திகளுக்குத் தெய்வீகத்தன்மையைக் கற்பித்துப் புகட்டுதல், பௌத்த ஜைன ஆசிரியர்களுக் கியல்பென்பது சரித்திர ஆராய்ச்சியார்க்குப் புதுமையாய்த்தோன்றாது. இவர்கள் முக்கிய கொள்கையான கர்மம் என்பது இதற்கு முதற்காரணமாகும். இதைக் கருதின், இக்கதைகளில் அசம்பாவிதமாய்த் தோன்றும் அநேக செய்திகள் தெளிவாய் விளங்கும்.

கரிகாலன்விஷயத்தை விளக்கப்புகின், அவன், " வென்வேலுருவப் பஃறேரிளையோன்சிறுவன் " என்றும், நாங்கூர்வேளுடன் சம்பந்தம்புரிந்தோனென்றுஞ் சொல்லும். கரிகாலன் இளமையிற் கானெருப்புற்றதால், இப்பெய ரிவனுக்காயதென்பது கீழ்வரும் பழமொழியால் விளங்கும்.

" முச்சக் காமு மளப்பதற்கு நீட்டியகா
விச்சக் கரமே யளந்ததாற்—செய்ச்செ
யரிகான்மேற் றேன்றொடுக்கு மாய்புனனீர் நாடன்
கரிகாலன் கானெருப் புற்று "

தவிர, இளமைப்பருவத்தானென் றிகழ்ந்த நரைமுது மக்களுவக்கும் வகை நரைமுடித்துவந்து முறைவேண்டிநாடிய இருதிறத்தாருஞ்சொல் லியசொற்கொண்டே ஆராய்ந்து அறிந்து முறைசெய்தசெய்தி ' இளமை நாணி முதுமை யெய்தி, யுரைமுடிவு காட்டிய வுரவோன் ' என்னும் மணிமேகலையடிகளாலும், " உரைமுடிவு காணு னிளமையோ னென்ற, நரைமுது மக்க ளுவப்ப—நரைமுடித்துச், சொல்லான் முறைசெய்தான் சோழன் குலவிச்சை, கல்லாமற் பாகம் படும் " என்னும் பழமொழி யாலும் நன்குபுலப்படும். பத்துப்பாட்டுப் பகுதிகளாகிய பொருநராற் றுப்படையிலும், பட்டினப்பாலையிலும், முடத்தாமக்கண்ணியாராலும், உருத்திரங்கண்ணனாராலும் முறையே சிறப்பிக்கப்பட்டவன் இவனே யாவன். அன்றியுஞ் சேரன் பெருஞ்சேரலாதனையும், அக்காலத்துப் பாண்டியனையும், "இருபெருவேந்தருமொருகளத்தவியவெண்ணிற்றாக்கி" னனெனவும், இப் புறங்கொடுத்தலை நாணி அச்சேரன் வடக்கே சென் றிருந்தான் எனவுங் கூறுவர் கழாத்தலையார். இச்செய்தியே வெண்ணிக் குயத்தியாரால்—

" நளியிரு முந்நீர் நாவா யோட்டி
வளிதொழி லாண்ட வுரவோன் மருக
களியியல் யானைக் கரிகால் வளவ
சென்றமர்க் கடந்தநின் னாற்ற றோன்ற
வென்றோய் நின்னினு நல்ல னன்றே
கலிகொள் யாணர் வெண்ணிப் பறந்தலை
மிகப்புக ழுலக மெய்திப்
புறப்புண் ணாணி வடக்கிருந் தோனே "

என்று சிறப்பிக்கப்பெற்றுள்ளது. பட்டினப்பாலைபாடிய உருத்திரங் கண்ணனார் பெரும்பாணாற்றுப்படையில் நாகபட்டினத்துச் சோழன் கிள்ளிக்கு நாககன்னிகை பயந்த தொண்டைமான் இளந்திரையனைச் சிறப்பித்தனர். இதையே டாக்டர் - ஹுல்ஷ் என்பவர் மேற்சொன்ன வாறு வற்புறுத்தினர்போலும்.

நெடுமுடிக்கிள்ளி யென்னும் இக்கிள்ளியே கரிகாலனுக்குப்பின் வந்த அதிர்ஷ்டவீனனான அரசனாவான். இவன்காலத்திற்றான் புகார் கடல்கொண்டதுமன்றிச் சோழர்மேன்மையும் மிகவும் கீழ்ப்பாடடைந்தது. தென்னிந்திய அரசர்களில் அதிர்ஷ்டவசமாய்க் கரிகாலனென்று பெயர்படைத்தவர் சிலரேயாகக் கிள்ளியென்போர் பலரேயாய் (சிலப். 9. புறத்தில்12) அவர்களுக்குள் இவ னின்னானென்று இணக்கிக் குறிப்பது வெகுகடினமானதாயு மிருக்கிறது. ஆயினும், தனிமைப் படுத்துஞ் சில இலக்கணங்கள் இவனை இன்னானென்று விளக்கிக்காட்டுங் கருவிகளாம். உறையூருக்கருகிலிருந்த நேரிவாயிலென்னு மூர்ப் புறத்துச் செங்குட்டுவனென்பான் தன் பேராற்றலால்,

"மைத்துன வளவன் கிள்ளியொடு பொருந்தா
வொத்த பண்பின ரொன்பது மன்ன
ரிளவரசு பொறாஅ ரேவல் கேளார்
வளநா டழிக்கும் மாண்பின ராதலி
னொன்பது குடையு மொருபக லொழித்துக்"

கிள்ளியைத் தன்னரசில் நிலைபெறச் செய்தனன். இதே செய்தி,

"ஆராச் செருவிற் சோழர்குடிக் குரியோ
ரொன்பதின்மர் வீழ வாயிற்புறத் திறுத்து"

என்று பரணரும், பதிற்றுப்பத்திற் சிறப்பித்துள்ளார். சிலப்பதிகார மணிமேகலைகளினின்றும் இவனே புகாரிற் கடைசியாய் ஆண்டவனென்றும், இவனாட்சியிலேயே புகார் கடல்கொண்டதென்றும் நாமறியலாம். இவன் சிறப்புப்பெயர் யாதேயாயினும், இக்கிள்ளியே டாக்டர் ஹூல்ஷ் என்பவாற் குறிக்கப்பட்ட தொண்டைமா னிளந்திரையனுக்குத் தகப்பனாவான். இச்செய்தி மணிமேகலை ஆபுத்திரனுடைந்தகாதையிலும் (50, 60) அதற்கடுத்த காதையிலும்(177—205.) நன்கு புலப்படும்.

*பன்னிரண்டு பதின்மூன்றாம் நூற்றாண்டில் விளங்கியவரான, உரையாசிரியர் நச்சினார்க்கினியராற் பெரும்பாணாற்றுப்படையுரையில் இத்தொண்டைமான் நாகபட்டினத்து ஒரு பிலத்தில்வதிந்த நாககன்னிகையொருத்திக்குஞ் சோழனுக்கும் பிறந்தவனென்று வரையப்பட்டுள்ளது.

* இவர் காலம் கி. பி. 9-ஆம் நூற்றாண்டென்று கொள்வர் ஸ்ரீமத் அனவரத விநாயகம்பிள்ளையவர்கள் எம். ஏ. எல். டி.

இப்பிலமே அக்காலத்து வழக்கில் நாகலோகமென்று வழங்கியது போலும். மணிமேகலையோவென்றால், புகாரழிவுக்குக் காரணங்கூறுமிடத்து, இவ்வளவசம்பாவிதமின்றி இக்கதையைப் பின்வருமாறுகூறும்.

"பொங்குதிரை யுலாவும் புன்னையங் கானற்
கிளர்மணி நெடுமுடிக் கிள்ளி முன்னா
விளவேனி லிறுப்ப விறும்பூது சான்ற
பூநாறு சோலை யாருமி லொருசிறைத்
தானே தமிய ளொருத்தி தோன்ற
.....................................
பலர்புறங் கண்டோன் பணிந்துதொழில் கேட்ப
வொருமதி யெல்லை கழிப்பினு முரையாள்
பொருவரு பூங்கொடி போயின வந்நாள்"

"நாக நன்னா டாள்வோன் றன்மகள்
பீலிவளை யென்பாள் பெண்டிருள் மிக்கோள்
பனிப்பகை வானவன் வழியிற் றோன்றிய
புனிற்றிளங் குழவியொடு பூங்கொடி பொருந்தியித்
தீவகம் (மணிபல்லவம்) வலஞ் செய்து......
மாபெரும் பீடிகை வலங்கொண் டேத்துழிக்"

கம்பளச்செட்டியென்பான் வணிகனது நாவா யங்குவா அவன் திறமறிந்து கொற்றவன்மக னிவனைக்கொள்கென, அவன்வாங்கிச் செல்வோன் காரிருளிற் றன்மரக்கலங் கெட்டதாக அப்புதல்வனைக்காணுமற் கிள்ளிக்குரைக்க அம்மன்னவன் மகனுக் குற்றது பொறானாய் நன்மணியிழந்தநாகத்தைப் போற் கானலும் கடலுங் கரையு மெங்குந் தேடுவதி லிந்திரவிழாவை மறக்க,

"மணிமேகலாதெய்வமற்றதுபொறா அ
ளணிநகர்தன்னையலைகடல்கொள்கென
விட்டனள்சாபம்,"

இச்சாபத்தாற் புகார் கடல்கொண்டது. இதே தொண்டைமான் பிறப்புச்செய்தியாயின் இத்தகைய கிள்ளியென்பானும் அரசனொருவ னிருந்திருத்தல்கூடுமென்பது சிறிதும் அசம்பாவிதமாகாது. ஆகையால் டாக்டர் ஹூல்ஷ் என்பவருடைய எதிர்கோள் வலியற்றதாகும். தவிர, நாககன்னிகையென்பதற்குப் பாதாளமே போகவேண்டிய

நிமித்தமில்லை. நாகரென்னுஞ்சனங்கள் இந்தியாவிலும், இலங்கையிலு மிருந்து, புத்தபீடிகைக்காகவும் இன்னுஞ் சில புத்தசம்பந்த ஞாபக வஸ்துக்களுக்காகவும் போர்புரிந்தனரென்று இலங்கை மகா வம்சம் செப்பும். ஆகையால், பாதாளலோகஞ்சென்றானென்னுங் கூற்று இந்நாட்டார்க்கேயுரித்தான ஒருவித யுக்தியாகும். தவிர, இவ்விரண்டுகாப்பியங்களிலு மியம்பப்படும் இன்னு மநேகவிஷயங்க ளிக்காலத்து, ஏனையோர்க்கு நம்பவொண்ணாததாயிருப்பது, இக்காப்பியக்காரர்கள் கர்மம் மறுஜன்மம் என்பவைகளில் நம்பிக்கையுள்ளவர்களாயிருப்பதன்றி, சாதாரணச்செய்திகளுக்கும் முற்பிறப்புச்செய்திகளினின்று காரணங்காட்டமுயல்வதேயாம்.

இஃதின்றாக மேற்கூறிய புகாரழிவே சிலப்பதிகாரவிறுதியிற் கிள்ளியை உறையூருடனெருங்குபடுத்தியிருப்பதற்குக் காரணமாகும். அன்றியும், இச்சிலப்பதிகாரக்கதையிடையிலேயே காவிரிப்பூம்பட்டினம் கடல்கொண்டது தெளிவுபெறும். இக்காலத்துக் காஞ்சிநகரிலாண்டவன் கழற்கிள்ளியின்பின்னோனான இளங்கிள்ளியென்பானென்று மணிமேகலையிற் காணப்பெறுகிறது. புகாரிற் கடைசியாயாண்ட இக்கிள்ளி மணிமேகலையில் வடிவேற்கிள்ளி, வென்வேற்கிள்ளி, மாவண்கிள்ளி, நெடுமுடிக்கிள்ளியென்னும் பெயர்களாற் சிறப்பித்துச் சொல்லப்படுகிறான் ; தன்பின்னோனான இளங்கோ (காஞ்சியாண்ட இளங்கிள்ளிபோலும்) வுடன் சேரபாண்டியரைக் காரியாற்றிற் புறங்கண்டவன். இவனைப்பற்றியவையான புறப்பாட்டுமூன்றும் இவன் உறையூரிலும் ஆமூரிலும், நலங்கிள்ளியென்பவனால் முற்றுப்பெற்றதாகச் சொல்லும். புகார் கடல்கொண்டவுட னிவ னித்தகைய துர்க்கதியையடைய, செங்குட்டுவன் நேரிவாயிலில் இக்கிள்ளியொடுபொருந்தாவொன்பதின்மரையுந் தோல்வியடைவித்தபோாற்றலால் இந்நிலையினின்றும் நீங்கியவனுவன். இப்பாடல்களை ஆக்கியோரான, கோவூர் கிழார் குளமுற்றத்துத்துஞ்சியகிள்ளியென்பானொருவனைச் சிறப்பிப்பர். புறநானூற்றிலும், சிறுபாணாற்றுப்படையிலும், இக்கிள்ளிகளில் ஒருவரும் புகாருடன்சேர்த்துச் சொல்லப்பட்டாரில்லை.

1. சோழர்கள் இத்தகையோராக, இக் காப்பியங்களிரண்டின் செய்திகளும் நிகழ்ந்தகாலமுழுமையும், சேரதேசம், பெரியாற்றுத்துறை முகத்துவஞ்சியில் ஆண்ட சேரன்செங்குட்டுவன் ஆட்சிப்பாலதே யாயிற்று. இக்காப்பியங்களிலும் இதற்குமுன்னெடுத்தாளப்பட்ட பிற நூல்களிலும் இவ னாற்றற்பாடு விரிவாயுரைக்கப்பெற்றுள்ளது. இவன் தந்தையும் அவற்கிளைபோனும் பதிற்றுப்பத்தி னிரண்டாம் மூன்றும் பத்துக்களில் முறையே புகழப்பட்டுள்ளார். இவ னருஞ்செயல்கள் கடற்கடம்பெறிந்ததும், இருவிசை கங்கைப்பேரியாற்றில் வடவாரியர் படைதந்ததும், நேரிவாயில் வியலூர்களில் வென்றியடைந்து கொங்கர் செங்களம்வேட்டவைகளுமேயாம். தன் தந்தை இமயவரம்பன் நெடுஞ் சேரலாதனைப்போலச் செங்குட்டுவனும் இமயப்பிடரில் விற்பொறித்த தாகச்சொல்லுவர்.

மதுரையைக் கருதின், சிலப்பதிகாரம், ஆரியப்படைதந்தநெடுஞ் செழியன் — அவனிறக்குங்காற் கொற்கையாண்டிருந்த இளஞ்செழியன் இவ்விருபாண்டியரின்பெயரையே கூறும். இவ்விருபெயர்களையும் ஆரா யப்புகுமுன் தமிழ்ச்சரிதத்தில் மிகவும் சிறந்தோங்கிய மற்றொரு பாண்டியன்பெயரை விசாரித்தல் அவசியமாகும். திருவள்ளுவர் தம் குறளைச் சங்கமேற்ற விழைந்துவந்தபொழுது, கானப்பேரெயிறந்து வேங்கைமார்பனைப் புறங்கண்ட உக்கிரப்பெருவழுதியே மதுரையாண்டவ னென்பர். திருவிளையாடற்புராண மிவன் சில அற்புதச்செய்திகளை இயற்றியதாகக்கூறும். முன்னெடுத்துக்காட்டிய மேற்கோளில், ஆலங் காடு அல்லது ஆலவாயென்னும் மாங்காட்டில் வசிக்கும் மலைநாட்டுப் பார்ப்பனனொருவன், விஷ்ணுவாலய யாத்திரைசெய்வான் உறையூரி லிராத்தங்கிப் பொழுதுபுலருங்காற் கோவலன்செவியுற இச்செய்தி களையே செப்பிப் பாண்டியனைப் புகழ்ந்தோனுவன். இச் செய்திகள் அக்காலத் தரசாண்ட பாண்டியற் கேற்பனவல்லவாயின், திருமாலிருஞ் சோலைகண்டு மதுரையிற் றங்கிய பார்ப்பான்சொல்லல் சிறிதும் ஒவ் வாததாகும். சிலப்பதிகாரம் பாடிய இளங்கோவடிகள், இப்பாண்டியனை ஆரியப்படைதந்த பாண்டியன் நெடுஞ்செழியனென்றே கூறுவர். இவ் வாரியப்படை எற்றேனுமாகுக. இக்காவியத்தில் இவன் இமயமலையிற் கயல்பொறித்தசெய்தி அநேக இடங்களிற் குறிக்கப்பெற்றிருக்கிறது.

சோழன்கரிகாலன், பாண்டியன் உக்கிரப்பெருவழுதி, இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் இம்மூவேந்தர்களும் தங்கள் இலாஞ்சனைகளை இமயத்திலியற்றிய பெரும்புகழாளிகளாகக் கூறப்படுவர். இச் செய்தி சிலப்பதிகாரம் 17-ம் காதையின்முதலிலுங் கடையிலும் அக்காலத் தாண்ட பாண்டியற்கேற்பக் கூறப்பெற்றுள்ளது. ஆதலால், புராணங்களிலும் பழங்கதைகளிலும் வழங்கப்பெறும் உக்கிரபாண்டியனே சிலப்பதிகாரத்தில் ஆரியப்படைதந்த நெடுஞ்செழியனென்று வழங்கப்படுவோனென்பது ஒருவாறு துணியலாம். காலஞ்சென்ற ஸ்ரீமத். கனகசபைப்பிள்ளையவர்கள் எழுதிவித்த இன்பம்பயக்கும் "பதினெட்டு நூற்றாண்டின்முன் தமிழர்கள்" என்னும் வியாசத்திற் கரிகாலன்பேரனை கிள்ளிக்குச் சமகாலத்தவனாக உக்கிரபாண்டியனை நிறுத்துவர். அற்றேபாயின், உக்கிரபாண்டியன்காலத்துச் சங்கமேறிய கூறளினின்றும் இளங்கோவும் சாத்தனாரும் மேற்கோள்கொள்ள வியலாதாகும். அங்ஙனமேயாயின், பரணரைப்பற்றி ஔவைகூறியதாகக் கீழெடுத்துக் காட்டப்பட்ட கூற்று இவ் வொற்றுமையுடன் முற்று மொவ்வும். ஏனெனில், அக்கூற்றின்படி அவ்விருவரிற் பரணரே முந்தியவராவர்.

அவன்மகனேபோற் றோன்று மிப்பாண்டியன்-நெடுஞ்செழியற்குப் பின்னாண்டவன், வெற்றிவேற்செழியனென்னும் பாண்டிய னிளஞ்செழியன்; தன் தந்தை யிறக்குங்கால் கொற்கையாண்டிருந்து, இக்கதை நிகழ்ச்சிப்பருவத்திலேயே அரசவாழ்க்கை பெற்றோனவன். இவன் கண்ணகி கடுங்கோபமாற்ற நூறு பொற்கொல்லரை உயிர்ப்பலியூட்டினனென்னுஞ்செய்தியொன்று தவிர, அவன் விஷயம் மற்றொன்றும் புலப்படவில்லை. ஒருகால் அவனாண்டகாலம் சிறிதேயாய் ஒரு விசேஷமில்லாததாயுமிருந்திருக்கலாம். இவற்குப்பின் இருபெருவேந்தரையும் ஏழு குறுநிலமன்னரையும் ஒருங்கே தலையாலங்கானத்துச் செருவில் வென்ற பாண்டியன் நெடுஞ்செழிய னாண்டிருத்தல்வேண்டும். யானைக் கட்சேய் மாந்தரஞ்சேரலிரும்பொறையைக் கபிலர் புகழ்ந்துள்ளதாகப் பொருந்திலிளங்கீரனார் புறநானூற்று 53-ல் கூறியதை மேற்கோள் காட்டியுள்ளாம். இச் சேரன், இக்காலத்துக் 'கொயிலாண்டி' யென வழங்கும் குட்டுவன் தொண்டியைப யாண்டோனெனவும், சேலம் ஜில்லா திருச்சிராப்பள்ளியெல்லைக் கருகிலிருக்கும் கொல்லிமலையை யாண்டோனெனவும் கூறுவர். • சிலப்பதிகாரம் குன்றக்குரவையில் இவன்,

" வில்லெழுதிய விமயத்தொடு
கொல்லி யாண்ட குடவர் கோவே"

என்று விளிக்கப்பெற்றுள்ளான். இந்நாட்டில் யானைக்கட்சேய் ஆட்சி பெற்றது, செங்குட்டுவன் கொங்கர்செங்களம்வேட்டு அருகிலுள்ள வியலூரில் வெற்றிபெற்று உறையூருக்கணித்தாகிய நேரிவாயிலில் ஒன்பது சோழரைப் புறங்கண்டதனாலேயன்றி மற்றியலாது. இச்சேய், தலையாலங்கானத்துச்செருவென்றநெடுஞ்செழியனாற் சிறைப்படுத்தப் பட்டான். இப்பாண்டியன் நெடுஞ்செழியன் தமிழ்க்கவியிற் பெரும்புகழ் பெற்றுச் சங்கமிருந்தோங்கிய தமிழ்க்கவிஞானவரையும் தன்னவையிற் பெருமைபாராட்டியயோனவன். பத்துப்பாட்டுள் மாங்குடிமருதனால் மதுரைக்காஞ்சியிலும், நக்கீரனால் நெடுநல்வாடையிலுஞ் சிறப்பிக்கப் பெற்று அக்காலத்து அரசர்களில் அநேகரைப்போலவும், தன்பாட்டனைப் போலவும் பாவன்மைவாய்ந்தவனாயிருந்தான். இவனைப்பற்றிய பாடல்கள் புறநானூற்றிற் பலவுள. இவ்வாராய்ச்சியால் இக்கதை நிகழ்ந்தகாலத்துப் புகாரிலாண்டவர்கள் - கரிகாலனும் கோக்கிள்ளியு மாவர் (இவ்விருவர்க்குமிடையே நலங்கிள்ளியென்பானை நிறுத்துவர் மகா-ா-ா-ஸ்ரீ கனகசபைப்பிள்ளையவர்கள்) என்றும், மதுரையையாண்டவர் உக்கிரபாண்டியனொடு ஒருமைப்படுத்தப்பட்ட நெடுஞ்செழியனும் அவற்குப்பின்வந்த இளஞ்செழியனும் அவன்பின்வந்த தலையாலங் கானத்துச் செருவென்றநெடுஞ்செழியனு மாவரென்றும், வஞ்சியில் இக்காலமெல்லா மாண்டவன் சிலப்பதிகார ஆசிரியர் இளங்கோவடிகளுக்கு மூத்தோனும் மணிமேகலையாசிரியர்க்கு நண்பனுமாகிய சேரன்செங்குட்டுவன் என்றும் ஒருதலை துணியப்பட்டது. யானைக்கட்சேய், இச்செங்குட்டுவனுடையமகனாய்ப் புதிதாய்ப்பிடித்த நாட்டை ஆளுதற்கு நியமிக்கப்பெற்றவனாயிருத்தல்வேண்டும்.

ஔவையார் பரணர் கபில ரின்னோரன்ன இசைபெற்றுவிளங்கிய தமிழ்வல்லார்காலத்துச் செழிப்புற்றோங்கிய மூந்நாட்டு முடியுடைமன்னர் இவர்களேயாவர். செல்வப்பெருக்கில் இம்மூவ ரெத்தகைச்சிறப்பினரோ, கல்விப்பெருக்கி லம்மூவ ரத்தகைச் சிறப்பினர். இவரன்றி அக்காலத்திய ஏனையகவிகளும் கவிவள்ளலாரும் அநேகர். அவ்வள்ளலாரிற் பின்வருபவர்களைப் பற்றி முன்னமே கூறியுள்ளாம். இவர்கள்

யாவரெனின் :—பறம்புநாட்டையும் பறம்புமலையையுமுடைய பாரி, மலைநாட்டுத் திருக்கோவலூரையும் முள்ளூர்மலையையுமுடைய காரி, துவரையில் முனிவன்தடவினுட்டோன்றியோர்வழிவந்து அரயத்துக் கதிபதியாய்த் தவத்திற்றங்கிய பெரியோரைப் பிழைப்பிப்பான் புலியைக் கொன்ற புலிகடிமா லிருங்கோவேள், மலைநாட்டு நல்லூர்க்கதிபதியான பழனியைச்சூழ்நாட்டையுடைய வையாவிக்கோப் பெரும்பேகன், தகடூரையும் குதிரைமலையையுமுடையனுப் பதிற்றுப்பத்து எட்டாம்பத்திற் சிறப்பிக்கப்பெற்ற தகடூரெறிந்த பெருஞ்சேரலாற் சீரழிந்த அதியமானஞ்சி என இவர். இவர்களெல்லோரும் தத்தம் பெயராலும் சிறப்புற்ற செய்கைகளாலும் நல்லூர்நத்தத்தனாரற் சிறுபாணாற்றுப்படையில் வெகுவாய் நம்பவெண்ணுக்கற்பனைகளாற் சிறப்பிக்கப்பெற்றுள்ளார். இவர்கள் தவிரத் தொண்டிக்கும் கொல்லிமலைக்கும் அதிபதியாகிய யானைக்கட்சேய் விஷயமும் வரைந்துள்ளாம். பாவல்லோர்களில் முன்னரே எடுத்தாண்ட மூவர்களோடு இன்னுஞ் சிலரையும் ஈண்டுக் குறிப்பித்தல்வேண்டுவதாகுமாதலின், மிகச்சிறப்புற்று இதுகாறும் தமிழகத்தில் அவரவர்பாகுபாட்டில் முதன்மைபெற்றுவிளங்கும் திருவள்ளுவர், இளங்கோவடிகள், சீத்தலைச்சாத்தனர், உருத்திரங்கண்ணனர், மூடத்தாமக்கண்ணியார், மாங்குடிமருதனர், நக்கீரர் இன்னோரன்னோரைக் குறிக்காமற்போகவியலாது. கீழ்க்கூறியவள்ளலாரிற் சிலர்களேயன்றிப் பாரிமகளிர் இருவரும் பாவல்லோரென்பதற்குப் பாரியிறந்தபோது அவர்கள் பாடிய பரிதாபக்கண்ணிகளே தக்கசான்றும். தவிர, பூதப்பாண்டியனுடன் தீப்பாய்ந்த அவன் றேவி பாடிய பாடலொன்று புறநானூற்றிலுண்டு. செங்குட்டுவன்காலத்து (எனின் அவர்க்கொருதலைமுறை முன்னும் பின்னும் சேர்ந்தாகியது) கல்விவளர்ப்பு மிகச்சிறப்புற்றோங்கியதாதலால் அதே மூன்றாஞ்சங்கம் மிகவுயர்வுற்றோங்கியகாலமாதல் வேண்டும் என்னும் கொள்கைக்கு இக்கவியாளர்பெயர்களே தக்க ஆதாரமாகும். இதினின்றும் குறள்வள்ளுவர், இளங்கோ சாத்தனு ரிவர்கட்கு வெகுவாய் முந்தியிருத்தலியலாதென்பதும் கரதலாமலகமாகும். ஆயினும் இவ்விருவரும் குறளினின்றும் மேற்கோள்வழங்குவ தெற்றோவெனின், குறள் சீத்தலைச்சாத்தனரோடுகூடிய சங்கப்புலவரெதிரே ஓதப்பெற்று அவர்கள் நன்கு மதிப்படைந்திருந்ததே. இளங்கோவடிகளோ குறள்மேற்கோளெடுத்து வழங்கினும் இச்சங்கத்திற் சேர்ந்தவரல்லர்.

இக்காலத்திற்முனே பௌத்தமதம் மிகவுயர்வுற்று இதர பிற்காலத்திய மதத்திருத்தமுயற்சிகளைப்போல் தேசபாஷாபிவிருத்திக்குத் தூண்டு கோலாய்நின்றது. இத்தகைய புராதனநூல்களிற் சங்கமென்னும்பெயர் காணக்கிடைக்காதேயாயினும், மேற்கூறிய பாவல்லோரி லநேகர் ஏனைய வள்ளலாருடன் வதிந்து தமிழ்வளர்த்தவரேயாயினும், தமிழ்வளர்ச்சி மதுரைக்கேயுரித்தாகப் பாராட்டப்பட்டு, அம்மதுரை புறநானூறு சிறு பாணுற்றுப்படைகளிலும் பிற்காலத்ததாகிய கலிங்கத்துப்பரணியிலும் தமிழ்க்கூடலென்று வழங்கப்பெற்றுள்ளது. சங்கத்தாரென்று தொன்று தொட்டு வழங்கிவரும் நாற்பத்தொன்பதின்மருள் மேற்கூறிய கவிவாணர் களின்பெயர் அநேகம் காணக்கிடைப்பதால் அக்காலத்து மதுரையில் இத்தகைய சங்கமொன் றிருத்தல்வேண்டுமென்று துணிய இடமுண்டு.

மேற்கூறிய கலைஞருக்குச் சமகாலத்தவரான கவிவாணர்களைத் தேடித்திரட்டப்புகாமல் இத்தகைய தமிழ்ச்செழிப்பு எக்காலத்ததென்று ஆராயப்புகுவது செவ்வியதாகும். சிலப்பதிகார மணிமேகலைகள் பௌத்தகாலத்தவைகளேயாயினும், பௌத்தக்கொள்கைகள் மணிமேகலை யில் விசேஷித்துரைக்கப்பட்டுள்ளன. அக்காலத்திய பிறநூலிலும் பௌத்தசம்பந்தமான விஷயங்கள் ஆங்காங்குக் காணக்கிடப்பதனுற் பெருநூல்கள் கீழ்வருமாறு வைக்கப்பெறுவது முறைமைபெற்றதாகும். அவைகளில் இருபெருங்காவியங்களில் மேற்கோளாக எடுத்தாளப்பட்ட குறளே முதன்மைத்தாம். சற்றேறக்குறைய அதேகாலத்தில் இயற்றப் பெற்ற சிலப்பதிகாரம் மணிமேகலையென்னும் இருபெருங்காப்பியங்களுள் முந்தியது மணிமேகலையாம். குற ளரங்கேறியகாலத்தவனுன உக்கிர பாண்டியனுல் அவன் காலத்திற்கு முன் வெவ்வேறுகாலத்தில் ஆங்காங்குப் பாடப்பெற்ற அகநானூறு தொகுப்பிக்கப்பெற்றதென்ப. குண்டல கேசியென்பது நமக்கு இதுகாறும் தெரிந்தமட்டும் பௌத்தவாதப் பண் பிற்றாய் மணிமேகலையைப்போன்றதொன்று. இதைக் கண்டிக்கமுயலும் நீலகேசித்தெருட்டை இதற்றுப் பிற்காலத்ததாகப் புகலவேவேண்டும். செந்தமிழ்ப்பத்திராசிரியாற் சூசிப்பிக்கப்பெற்ற இத்தகைத் தமிழ்ப் பயிற்சியின்போக்கு அங்கீகரிக்கப்பெற்று இப் பெரும்பயிற்சியின் கால மும் ஒருவாறு வரையறுக்கப்பெறுமேல், இக்காலவரையறையே தமிழ்ச் சரித காலவாராய்ச்சிக்கு இன்றியமையாத பற்றுக்கோடாம்.

ஒருவகைத்தான ஒலியும் பொருளும்பெற்ற பெயர்களை நிரம்பி, வழிதுறைபுலப்படா இக்காலத்திய தமிழ்க்கானத்தில் தனிமைபெற்று விளங்கும் சில பெயர்களையும் சிறப்புக்களையுங் கொண்டே ஒருவகைச் சார்புமின்றி யொருங்குபட்டமனத்தோடு ஆராய்வான்புகின், இத்தகைய முயற்சி வீண்முயற்சியாகாது. கிள்ளியென்னும்பெயர் சோழருக்குப் பொதுப்பெயராயினும் கரிகாலனென்பது அத்தகைத்தன்று. செங்குட்டுவனென்பது தனிப்பெயராகவே தோன்றுகிறது. அப்படியே அவனண்பனான கஜபாகுவின்பெயரும் இலங்கைச்சரிதத்திலடங்கிய 174-பெயர்களில் விக்கிரமபாகுவைப்போல் வெகுதாங் காணப்படாமல், இருவர்க்கே யுரித்தாகக் காணப்பெறுகிறது. பன்னிரண்டாம்நூற்றுண்டின்முதலில் ஆக்கப்பெற்ற கலிங்கத்துப்பரணி கரிகால கோக்கிள்ளியரை முறைதிறம்பக்கூறிக் கிள்ளியை முதலும் கோச்செங்கணானை யவற்குப் பின்னும் கடைசியாய்க் கரிகாலனையு மமைத்துக் கூறும். கரிகாலனுக்குமுன் மூன்றுந்தலைமுறையிற் கிள்ளியென்பான் ஒருவன் உண்டென்பது புறநானூற்றால் விளங்கும். அப்படியாயின், அக்காலத்திய சோழபரம்பரை கீழ்வருமாறு நிற்கப்பெறும் :—இளஞ்சேட்சென்னி, அவன்மகன் கரிகாலன், அவன் பேரன் நெடுமுடிக்கிள்ளி. சயங்கொண்டாருக்குப்பின் வதிந்த பெரிய உரையாசிரியர்கள்போலவே, கலிங்கத்துப் பரணியும் கிள்ளி நாகலோகம்புக்ககதையைப் புகலும். இத்தகைத்தேயாயின், நாககன்னிகையை மணந்த கிள்ளி இன்னானென்பது தவறுபடுதற்கிடனுண்டு. இப்படியேயாயின் இமயத்திற் புலிபொறித்த கரிகாலன் முதலாங்குலோத்துங்கனென்பதும் அவன்மாமனார் இராஜேந்திர சோழன்காலத்து உறையூராண்ட அதிகாரி யென்பதும் சற்று மியலாது. தாம்பிரசாசனங்களாலும் கல்வெட்டுக்களாலும் பின்னாளைய சோழபரம்பரையிற்கண்டமட்டும் பத்தாம்நூற்றுண்டி விரண்டாம்பாகத்தில் வதிந்தவனும் வீரபாண்டியன்முடியை விளையாட்டாய்ச்செய்வித்தவனான ஆதித்தியகரிகாலனென்பான்பெயர் காணப்பெறும். ஆனால், கலிங்கத்துப் பரணியுடையார் இப்புலிபொறித்த கரிகாலனை வீரநாராயணன் அல்லது பராந்தகனென்பவனுக்கு மூன்றுபெயர் முற்படநிறுத்தியுள்ளார். ஆதித்திய கரிகாலனேவென்றால் இப் பராந்தகனுக்கு முதற்புதல்வனும் முதலாதித்தியனுக்குப் பேரனும் விளங்குபவன். ஆகையால், இக்கரிகாலனை கி. பி. தொள்ளாயிரத்துக்குமுன்னதாகவே பார்க்கவேண்டுமென்பது அத்தியாவசியகமாகிறது.

மேற்கூறிய பெருநூல்களாக்கியகாலம், அந் நூல்களினின்றுமே பௌத்தமதம் உயர்வுற்றேங்கியகாலத்து ஆக்கப்பட்டனவாக வேண்டு மென்பது முன்னரே காட்டியுள்ளாம். பௌத்தமதமோ சீனதேசத்தா ராகிய யுவன்சுவாங் இந்தியாவில் யாத்திரைசெய்ததும் திருஞானசம் பந்தர் வதிந்தகாலமுமான ஏழாம் நூற்றுண்டினிடையே சீர்குலைந்தது. கி. பி. எழுநூற்றைம்பதாமாண்டளவில் குடந்தைக் (கும்பகோணம்) கருகில் உள்ளதாகிய திருப்பாம்பியத்தில் வரகுணபாண்டியனுக்கும் பாச்சிமகங்கவம்சத்தவனான சிவமாரனுக்கும் போர்விளைந்தது. சோழர் கள் பிரபலம்பெற்றவர்களாயிருப்பின் இவ்விடத்தில் இப்போ ரியலாது. அன்றி, இக்காலத்திய நூல்களினின்றும் கங்கர் அவ்வளவு உயர்வுற்றவரா யிருந்ததாகத் தெரியவில்லை. இக்காலமோ சரித்திரவாராய்ச்சியால், சமுத்திரகுப்தனுக்குச் சமகாலத்தவனான காஞ்சியரசன் விஷ்ணுகோபன் காலமுதல் (சுமார் கி. பி. 500-முதல்) உயர்வுற்றேங்கிய பல்லவருடைய சீர் குறைவுறுங்கால மாகிறது. அத்தகைய பல்லவர்பெருமை யாம் கண்டமட்டும் சங்கநூல்களிற் றோன்றவில்லை. அக்காலத்தில் நமக்குப் புலப்பட்ட தொண்டைமான் ஒருவன் காஞ்சியில் சோழவதிகாரியாய் வதிந்தனன். ராயக்கோட்டா சாசனங்களில் விஷ்ணுகோபனுக்கு மிகப் பழையனான ஸ்காந்தசிஷ்யனென்னும் பல்லவ அரசன் ஒரு நாககன்னிகை வழியாய் அசுவத்தாமன்மாபிலுதித்ததாய்ப் புகழ்ந்துகொள்ளுவது காணலாம். இதினின்றும் இளந்திரையன்பிறப்பு இக்காலத்திலேயே மறக்கப்பெற்றது, நம்பத்தக்கதாகச் சொல்லிய இக்கதையாற் றெளி வுறும். இவைகளையெல்லாம் யோசிக்குமளவில், கரிகாலன் இக்காலத் துக்கும் முந்தியவனாதல்வேண்டும்; தொன்றுதொட்டுவந்தகதைகளி லும் இவன் புகாருடன்சேர்த்துப் புகழப்பட்டுள்ளான். மணிமேகலையில் இவன்பின்னோனான கிள்ளியின்காலத்திற் புகார் கடல்கொண்டதென்பது தெற்றெனத் தெளிவித்துள்ளது. புறநானூற்றுப்பாடல்களில் வெவ் வேறு அடைகள்பெற்று வழங்கப்படும் கிள்ளிகளெல்லாம் உறையூரி லிருந்ததாகவேயன்றிப் புகாருடனும் புகலப்பெற்றுளர். சிலப்பதிகாரத்தி லும் உறையூர் ஒரு பேரூராய் வழங்கப்பட்டிருப்பதன்றி, சிறுபாணாற் றுப்படையிலுங்கூடப் புகார் வழங்கப்பெறாதது வெகு முக்கியமான விஷயமென்பது பின்தெரியும்.

பத்தினிதேவிக்கு ஆலயம் சமைத்துப் பெருவேள்வி விளைத்த காலத்து அவ்வேள்விக்கண் வந்திருந்த மன்னர்களிற் கடல்சூழிலங்கைக் கயவாகுவேந்தன் ஒருவன். இக் கயவாகுவும் மதுரையில் இளஞ் செழியனும் உறையூரிற் கிள்ளியும் பத்தினிக்கடவுளுக்கு ஆலயம் நிரு மித்தனராதலின், இக்கயவாகு அப்பெயர்கொண்ட இருவருள் முதல்வ னே இரண்டாமவனே என்று விமரிசைப்படுத்தவேண்டும். மகாவம் சத்தின்பிரகாரம் முதற்கயவாகு கி. பி. 113-முதல் 135-வரை இலங்கை முழுதும் ஒருவனேயாகி ஆண்டவன். இரண்டாமவன் இலங்கைமன் னர் மூவருள் ஒருவனுப் 1142-முதல் 1164-வரையாண்டவன். டாக்டர் ஹீல்ஷ் அவர்கள், ஸ்ரீமாந்-குமாரஸாமி அவர்களை உட்பிரமாணத்தால் இக்கயவாகு முதல்வனே என்பதை நிலைநிறுத்தவேண்டினரன்றே? அவ ருடைய மாறுகோளின் மற்றப்பாகமாகிய கிள்ளியின்கதைக்கு வெகு காலஞ்சென்று அவன்விஷயமாய் எழுதின சிலரே கற்பனைக்காரராவா ரென்பது இதுவரை தெளிவிக்கப்பட்டிருப்பதுந்தவிர, கோவலன் புது மணம்புரிந்து இல்வாழ்க்கைபுகுங்காற் புகாரி லாண்டவன் கரிகாலன் என்பதற்கும், இவ்வரசன்மகள் சோவரசன் இல்லக்கிழத்தியாயிருந் திருக்கக்கூடுமென்பதற்கு மியன்ற சான்றுகளைப் புகட்டியுள்ளாம். கஜ பாகுவின்விஷயமாய் ஆராயப்புகுவார் இக்கயவாகு இரண்டாமவனென்றே கொண்டால் இதுவரையும் நமக்குத்தெரிந்திருக்கிற அக்காலத்திய தென் னிந்தியசரித்திரத்துக்குச் சிறிது மிணங்காததாகும். எவ்வாறே வெனின் கி. பி. 12-ம் நூற்றாண்டினிடையில், தென்னிந்தியவரசர்களும் அவர்கள்நாட்டின் பாகுபாடும் பின்வரு மியற்கையவாகும். அக்காலத்திய சோழவரசர்கள் விக்கிரமசோழனே அல்லது இரண்டாங் குலோத் துங்கனே இருந்திருத்தல்வேண்டும். மதுரையில் வீர அல்லது விக் கிரமபாண்டியர்கள் இருந்திருத்தல்வேண்டும். சேரதேசத்தில் வீரகோள வர்மனும் வீரரவிவர்மனுமா யிருந்திருத்தல்வேண்டும். அக்காலம் மைசூர்த் தேயத்தையாண்டவர் போசலவிஷ்ணுவர்த்தனனும் அவன் மகன் நரசிம்மனுமாகல்வேண்டும். அபபோது காஞ்சிச் சோழராஜதானி களில் மைசூர்க்கருகில் அக்காலத்திற்குச் சிறிது முன்னதாய் அதிகமான் என்பவன் ஒருவன் இருந்ததாகக் காணப்படுகிறது; ஆயின் அவன் விஷ்ணுவர்த்தனனுடைய சிறப்புற்ற தளர்க்கர்த்தனாகிய காவிரிகடந் தோடப்பட்ட தலைக்காட்டிலிருந்த சோழமகாமண்டலேசுவரனேயன்றித்

தகடூர்க்குச் சம்பந்தப்பட்டவனல்லன். சிலப்பதிகாரத்தில் "குடகக் கொங்கருமாளுவவேந்தரும்" என்றதற்கேற்பக் கொங்குராசாக்கள் யாரு மிருந்ததாகத் தெரியவில்லை. எல்லாம் இப்படிநிற்க, கயவாகுவென்பான் தன்னூரைவிட்டுப் பேராற்றுத் துறைமுகத்ததாய் இக்காலத்துக் கொடுங்கலூரென்று வழங்கும் வஞ்சிக்குவரும்நிலைமையிலிருந்தன னல்லன். கஜபாகு தன்னயலாரான மானுபரணன், பராக்கிரமபாகுவென்போருடன் போர்புரிந்து அவர்களால் அழிவுபெறாமல் நிலைபெறும் அருமுயற்சியிலேயே யிருந்தனனென்று இலங்கைச்சரிதம் செப்பும். மேலும் இக்காலத்திய சேரவரசவீடு கொல்லமென்றே வழங்கப்படுகிறது.

முதற்கயவாகுவோவென்றால், தன் தகப்பன்காலத்திற் சோழர் படையெடுத்துவந்து சிறைகொண்டுபோய்ச் சோழதேசத்துக் "காவிரி நகர்க்கண்" அடிமைப்படுத்தப்பெற்றிருந்த இலங்கையர் மீட்சிக்காகப் படையெடுத்துப்போய் அவர்களால் முன்னமே கொண்டுபோகப்பட்ட பௌத்தபாத்திரத்தையும் இன்னுஞ் சில பௌத்தஞாபகவஸ்துக்களையும் கொணர்ந்தனனென்று மகாவம்சம் கூறும். ராஜரத்நாகரியோவென்றால் இச்செய்திகளையே கூறுமிடத்து இலங்கையர் தமக்குத்தாமே "காவிரி நதிக்குச்" சென்றவரென்று புகலும். [இங்கு, காவிரிநதியென்றது ராஜரத்நாகரியெழுதுங்கால், காவிரிமுகத்தில் பட்டினமிருந்தது மறைந்தமையைப் புலப்படுத்தும்.] இப்படையெழுச்சியினின்றுமீளுங்காற் கயவாகு அநேகம் தமிழரைக்கொணர்ந்து இலங்கையிற் குடியேற்றினனென்றுங் கூறும். ராஜாவளி இச்செய்திகளை யின்னும் விரிவுசெய்கிறது. அதில் இவ்வரசன்பெயர் ராஜபாகுவென்று காணப்படுகிறது. (எழுத்துப்பிழையினாற் போலும்.) இவன் வழக்கம்போல் இராத்திரியில் ஊர்ப்புறஞ் சுற்றுங்கால், சோழராஜ்யத்திற் சிறைப்பட்டிருந்த தன் னிருமக்களிழப்பேகாரணமாக ஒரு கைம்மை யழுவதைக் கேட்டான். இவ்வழுகைக்குக் காரணம், அதிகாரிகளால் அறியப்படாமற் போகவே அவளையே அழைப்பித்து அவளிடமிருந்து சோழராஷ்டிராத்தாசன் இலங்கைமேற் படையெடுத்து மீண்டபோது பன்னீராயிரம் குடிகளைக்கொண்டு மீண்டனன் என்னும் செய்தியைத் தான் அறிந்தான். இதற்குப்பின் மகாவம்சத்திலும் ராஜரத்நாகரியிலும் உரைக்கப்பெற்றுள்ள செய்திகளையெல்லாம் செப்பி இவன் சோழதேசத்தினின்று மீளுங்கால் பத்தினிதேவியின்சிலம்புகளையும் இன்னும் தெய்வங்களின்

நான்குலைகைகளையும் கொணர்ந்ததாக ராஜாவளி சொல்லும். இப்பத்தினி தேவி பத்தினிக்கடவுள் என்று மாறுபெயர்பெற்ற சிலப்பதிகாரநாயகி யாகிய கண்ணகியென்பதற் கையமில்லை. இவள் சிலம்பு அக்காலத்து அற்புதமான விலையிடவொண்ணாத ஞாபகவஸ்துவாய்ப் பாராட்டப் பெற்றிருத்தல்வேண்டும்; ஏனெனில், அக்காலத்தில் இத்தகைய ஞாபக வஸ்துக்கள் வெகு உயர்வாகக் கொண்டாடப்பட்டவை யென்று முன் னமே சொல்லியுள்ளாம். பௌத்தமதத்துப் பெருங் கொள்கைகளி லொன்றாகிய பூர்வஜன்மரகசியங்களையெல்லாம் வரையாமல் அளிக்கும் ஓரற்புதமானபாத்திரம் மணிமேகலை மணிபல்லவத்திற் பெற்றதாய்ச் செப்பியிருத்தலின், கஜபாகு இத்தகைய பாத்திரமொன்று எடுத்துச் சென்றானென்று சொல்வதில் அசம்பாவித மொன்றுமில்லை. மணிமே கலையில் ஒரு புத்த பீடிகைக்காக இரண்டு நாகவரசர்கள் போர்புரிந்தா ரெனவும் செப்பியுளது. இச்செய்திகளையெல்லாம் இலங்கைத்தேயசரி தங்கள் கஜபாகுவின்மே லேற்றிக்கூறும்; ஆயின் இப்பத்தினிதேவியைப் பற்றிய குறிப்பு, பழஞ்சரித்திரங்களிற் காணாமை பல்லோரும் பரிதபிக் கத்தக்கதே. ஆயினும் இச்சரிதங்களிற் பழையனவும் புதியனவும் எல்லாம் இதற்குமுன்னிருந்த நூல்களினின்றும் தொன்றுதொட் டாண்டுவந்த கதைகளினின்றுமே கூட்டியெழுதப்பட்டவை. இவ்விஷய மாய், இவைகளை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்த அபாம்மகான் கீழ்வரு மாறு புகன்றுள்ளார். "பழம்பிரதிகளுக்கும் புதுப்பிரதிகளுக்கும் வேறு பாடு வெகு சின்மைத்தாயிருக்கும்படி வெகு ஜாக்கிரதையோடு இச்சரி தங்களின்மூலம் தொன்றுதொட்டுவந்திருக்கிறது." "ராஜாவளியென் பது அவ்வத் தலசரிதங்களினின்றும் பல்லோரா லியற்றப்பெற்றுள் ளது. முற்சொல்லப்பட்ட இரண்டுநூல்களும் (மகாவம்சம், ராஜாத் நாகரி) தொடர்ச்சியாய் இலங்கைச்சரிதத்தைப் போர்ச்சுகல் தேசத் தவருக்கும் அவர்க் கெதிராளிகளான உலாந்தருக்கும் உண்டான போர் களின் முடிவுவரைக்கும் சரித்திரத்தைக் கொண்டுபோகின்றன."

ஆதலால், தொன்றுதொட்டு ஆன்றோரால் ஆளப்பெற்ற பழங் கதை களும் இவ்விருபெருங்காப்பியங்கட்கிணங்கிய சரித்திரசந்தர்ப்பங்களும் செங்குட்டுவச்சேரன் பெருவேள்வி வேட்டகாலத்து இலங்கையரசன் முதற்கயவாகுவே யென்பதைக் குறிக்க, ராஜாவளி சரித்திரவாராய்ச்சி

யில் நம்பத்தகுந்ததேயாயின், இக்கொள்கை வற்புறும். இஃ திற்றே யாயினும் பிறசான்றோர் சிலர் கொள்ளுமாறு மேற்கண்ட செய்திகளை இரண்டாங்கயவாகுவுடனிணக்குதற்குச் சிறிதும் காரணந்தோற்றவில்லை.

ஆயின் முதற்கயவாகுவின்காலம் யாதோ எனின் மகாவம்சம் கி. பி. 113–135என்று கூறும். இதனுடைய இக்காலவரையறையின் உண்மை யெற்றேயாயினும் இப்பெயர்பெற்ற இவன்பின்னோன்காலந் தவறாகக் கொள்ள இடமில்லை. பன்னிரண்டாம்நூற்றாண்டினிடைப்பருவத்தில் இக்கவிகள் பலரும் இருந்து செழித்தனர் என்று கொள்வதற்குத் தக்கசான்றுகள் முன்னமேயே காண்பித்துள்ளாம். காலஞ்சென்ற கனவான் ஸ்ரீமத். சுந்தரம்பிள்ளையவர்களால் எட்டாம்நூற்றாண்டில்வதிந்தவ ரென்று கொள்ளப்பெற்ற சுந்தரமூர்த்திநாயனார் "கொடுக்கிலாதானைப் பாரியேயென்று கூறினுங்கொடுப் பாரிலை" யென்று விளம்பினாராதலாலும் இப்பெருங்காப்பியங்கள் பௌத்தமதம் உன்னதநிலையில் நிறுவியதைக் குறிப்பதாலும் இக்கவிவாணர்காலம் அந்நூற்றாண்டு என்று கொள்ளவியலாது. ஜெனரல் கன்னிங்காம் என்பவர் கொள்கைக்கேற்பப் புத்தநிர்வாணம் கி. மு 543-ல் அன்று, 477-லேயே என்று தேர்ந்தாலும் முதற்கயவாகுவின் ஆட்சிக்காலம் கி. பி. 179—201ஆகும். மகாவம்சத்தில் வரைந்துள்ள பூர்வகாலவரையறை அபத்தமென்று நிலை நிறுத்தப்பெறுமளவும் இக்காலவரையறையே நிலையாகக் கொள்ளவேண்டும். ஏனெனில் ப்ரொபஸர் ரேஸ்டெவிட்ஸ் அவர்கள் சஞ்சி முதலான விடங்களில் அகப்பட்ட சிலாலிகிதங்களுக்கும் மகாவம்சத்துக்குமுள்ள ஒற்றுமையை அவரெழுதிய பௌத்த இந்தியா என்னும் புத்தகத்தில் 200—299, 300-ம் புடங்களில் தெரிவிப்பதனால் தமிழ் மிகச்சிறப்புற்றோங்கிய காலம் எற்றேனும் கிறிஸ்தவாப்தம் இரண்டு மூன்றாம் நூற்றாண்டுகட்குப்பின் னிறுத்தவொண்ணாதென்பது திண்ணம். கிறிஸ்து காலத்திற்குமுன்னமே வெகுதூரம் இலங்கைமேற் படையெடுத்துச் சென்று கி மு. முதல்நூற்றாண்டினிடையிலேயே அத்தீவையாண்டவர்களாகிய தமிழர் செருக்குக்கு இது முழுது மிணங்கும். இச்செய்திகளையும் ஐந்து கிரேக்கவரசர்களுடன் தமிழரை ஒருங்குபடுத்திக்கூறிய அசோகசக்கரவர்த்தி சாசனத்தையும் ஒருங்குநோக்கின் இத்தமிழருடைய உயர்ந்த நாகரிகம் வெகுபண்டைக்காலத்ததென்று கொள்ள இடங்கொடுக்கும்.

இக்கயவாகுவென்பான் தவிரத் தமிழருக்கு நட்புப்பூண்ட சிலரையும் வெம்மைகொண்ட சிலரையும் சிலப்பதிகாரத்திற் காணலாம். செங்குட்டுவனுக்கு நட்புப்பூண்டு அவன் பாலகுமாரன்மக்களாகிய கனக விசயரைக் கண்டிக்க வடதிசைப்போந்த அந்நாள், கங்கையைக் கடத்தற்கு நாவாய் உதவிய நண்பர் "நூற்றுவர்கன்னர்." இக் கனகவிசயர்க்குதவி புரிந்தவர்,

"உத்தரன்விசித்திரனுருத்திரன்பைரவன்
சித்திரன்சிங்கன்தனுத்தரன்சுவேதன்"

என்பார். ஸ்ரீமத்-கனகசபைப்பிள்ளையவர்கள் நூற்றுவர்கன்னர் என்பதை மச்சபுராணத்திற்காணும் சதகர்ணி என்னும் பதத்திற்கு மொழிபெயர்ப்பாகக்கொள்வர். இத்தகைக் கொள்கைக்கு, இளங்கோவடிகள்,

"அருந்தமிழாற்றலறிந்திலராங்கெனச்
சீற்றங்கொண்டிச்சேனைசெல்வது
நூற்றுவர்கன்னர்க்குச்சாற்றி"

என்று ஓரிடத்திலும்,

"வேற்றுமையின்றிமின்னொடுகலந்த
நூற்றுவர்கன்னர்"

என்று மற்றோரிடத்திலும் "கங்கைப் பேரியாற்றுக் கன்னரிற் பெற்ற வங்கப்பிறப்பு" என்று வேறோரிடத்திலும் வரைந்துள்ளது முரணும். தவிர, சதகர்ணியென்னும் பெயர் ஸ்ரீமான் பந்தார்க்கர் என்பவருடைய தக்கணசரித்திரத்திற்கண்டபடி ஒருவம்சத்தின்பெயரேயன்றி ஒருவன் பெயரன்று. ஆயினும் சதகர்ணியென்பது ஒருவன்பெயரேயாய் அவ் வம்சாவளியின்முதலில் கி. மு. 40 கி. பி. 16-க்குள் காணப்படுகிறது. அவ்வார்த்தையை நூண்செவியென்று மொழிபெயர்ப்பது நூறுசெவி யென்று வியப்புக்கூற்றாய், மொழிபெயர்ப்பதினும் நன்றாயிருக்கும். அன்றி அக்காலத்தவராகிய இளங்கோவடிகள் நூறு என்னும் அளவடையைக் காதின்மேலன்றி மனிதர்மேலேற்றி மொழிபெயர்த்தனரென்பது ஒவ்வாது. தவிர இவர்கள் மகததேசம் தங்கள் ராஜ்யத்திற் சேர்ந்திருந்தபோதிலும் தக்கணத்திலாண்டவர்களாய் இருந்தனர். அப்படியே "நூற்றுவர்கன்ன" ரென்றதை, சதகன்னியென்றே எடுத்தாளப்புகினும்,

செங்குட்டுவன்காலத்திய சதகன்னி மகாராஷ்டிரத்தில்[கி. பி. 154-முதல் 174-வரை ஆண்டு 172—202-வரை தெலுங்கணத்தில் ஆண்டவனான யக்ஞசிரி சதகர்ணியாயிருத்தல் கூடும் இப்படியேயாயினும் தெலுங்கணத்தில் கி. பி. 202-முதல் 208-வரை ஆண்ட விஜயனென்பான் பெயர் எல்லாப்புராணங்களிலும் காணப்பெறும். ஆயினும், செங்குட்டுவன் கங்கைக்கரைபோய் "உத்தரமரீஇ"க்கனகவிஜயருடன் போர்செய்தானென்பதற் கிது முரண்படும். இஃது தெற்றேயாயினும் செங்குட்டுவனிக் காலத்து விளங்கியவன் என்பது செங்குட்டுவன்தந்தையாகிய இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனும் ஆரியப்படைதந்த நெடுஞ்செழியனும் சோழன் கரிகாற்பெருவளத்தானும் ஆரியப்படை வெங்கண்ட செய்தியினின்றும் ஊகிக்கலாம். இக்காலத்தே நாகபானன் என்பவனும் அவற்குப்பின் வந்த ரிஷபதாதனென்பவனும் ஜீனூர் என்னும் ராஜதானியிலிருந்து மகாராஷ்டிரத்திற் கோளம்வரையி லாட்சிசெலுத்தினதாகத் தோற்றினதினாலும் இவர் வம்சத்தையும் மாளவதேசத்தை ஆண்ட சஷ்டணன் என்பவன் வம்சத்தையும் அழித்தவர் கோதமபுத்திர சதகர்ணியென்பானொடு அவன் மகன் புலோமவித் அல்லது புலிமாயி என்பதனானும் இத்தமிழ்வேந்தர்கள் கோதமபுத்ரசதகர்ணிக்கு உதவிபுரிந்திருத்தல் சாத்தியமென்பது ஒருதலை. கோதமபுத்ரசதகர்ணி குண்டூருக்கருகிலிருந்துவந்து இச்சகரைப் புறங்கண்டு தம்முன்னோர் ராச்சியத்தைக் கைக்கொண்டானென்றும், மலையச் சிம்யபர்வதங்களைச் சூழ்ந்த நாடுகள் அவராட்சிக்கடங்கியவை யென்றும் தெரியவந்திருப்பதையும், சோழன்கரிகாலன் வச்சிரநாட்டு மகத அவந்தி அரசர்களினால் நன்கு மதிக்கப்பெற்றானென்பதையும் உற்றுநோக்கின் இக்கரிகாலன்செய்தியை முழுதுங் கற்பனையாகக்கொள்ளவேண்டிய அவசியமில்லை. மேலாராய்ந்த விஷயங்களையெல்லாம் ஒருங்குபடநோக்கின் செங்குட்டுவன்காலம் கி. பி. 2-ம் நூற்றாண்டென்றும், தமிழ் மிகச் செழிப்புற்றோங்கிய காலம் கி. பி. 2, 3-ம் நூற்றாண்டுகளேயென்றும் கொள்ளவேண்டியதாயிருக்கிறது.

கி. மு. மூன்றாம்பாதத்தில் பௌத்தமதம் தென்னிந்தியாவிற் புக்கது. அது இங்கு ஊன்றி யுயர்ந்தோங்குவதற்கு அக்காலத்து நிலைமையில் வெகுநாள் பிடித்திருக்கவேண்டும். மணிமேகலையில் விரித்துரைக்கப்பெற்றிருக்கும் பௌத்தமதக் கொள்கைகளைக் கொண்டுநோக்கின். இலங்கைச்சரிதங்களை மொழிபெயர்த்தவராகிய கிறிஸ்தவ வித்வான்

களும் வியக்கத்தக்கதாய்ச் சிறந்தகொள்கையினின்றும் சற்றும் வழுவாததாய் அம்மதம் இங்கு இருந்ததென்றுகொள்ள வியலும். ஆகையினால், கிறிஸ்தவாப்தமுதல்நூற்றாண்டுகளே தென்னிந்தியாவில், பௌத்தமதம் சிறந்தோங்கிய காலமாகும். சீனயாத்திரிகரான பாஹியன் என்பவர் இத்தேசத்திலிருக்கும்போதே பௌத்தமதம் தன்மை புரண்டு பிராமணமதம் எதிரிடத்தலைப்பட்டது. அதற்குப்பின் இரண்டுமூன்று சதமானங்களில், பௌத்தமதம் துடைக்கப்பெறத் தமிழ்த் தேயத்தில் சைவ அடியார் வைஷ்ணவ ஆழ்வார்களான பெரியோர் பெருமுயற்சியால் பிராமணமதம் யுவன்சுவாங் யாத்திரிகர்காலத்தில் இழந்த சீரைத் திரும்பப்பெற்று விளங்கிற்று. இக்காலத்தினின்றும் விளைந்த வாதங்கள் சமணருக்கும் பிராமணருக்குமேயன்றி, பிராமணருக்கும் பௌத்தருக்கு மவ்வளவாய்க் காணப்படவில்லை.

துங்கபத்திரைக்குத் தென்பாற்பட்ட நந்தேயமானது பின்வரும் ஆட்சிப்பாடடைந்திருந்தது. காவிரிமுகத்தினின்றும் புறப்பட்டுக் காவிரிக்கரையே சென்று கரூர்க்கருகில் அந்நதிபுகும் அமராவதிக்கரை மார்க்கமாகவே அதுபிறக்கும் மலயமலையடிவாரம்வரைக்கும்போனால், சேரபாண்டியநாட் டெல்லையைக் குறிப்பிட்டதாகும். கரூரினின்றும் சோழன்தொண்டிக்குக் கொஞ்சம் தெற்காகச் சமுத்திரக்கரைவரை நேர் தென்கிழக்காய் ஒரு வரியிழுப்பின் அதற்குத் தென்னாடு பாண்டியர்க்கும் வடநாடு சோழர்க்கு முரித்தானதாகும். ஆயின், அவரவரது என்று மேற்குறிக்கப்பட்ட நாடுகள் எப்பொழுதும் அவரவர் வசப்பட்டதேயென்று கருதவொண்ணாது. எல்லையூர்கள் வெகுஜாக்கிரதையோடும் அரண் முதலியவைகளாற் பலப்படுத்தப்பெற்றதனால் அவைகளையடக்கி யாள்வது வெகுகடினமென்று அக்காலத்தியவரசர்கள் தெரிந்தனரென்று ஊகிக்கலாம். புகார் அரசுவீடாயிருந்தகாலத்திலுங்கூடச் சோழர்கள் எப்போதும் மேற்கே உறையூரையும் வடக்கே காஞ்சியையும் போர்க்குரிய போரரண்களாய் நிருமித்திருந்தனரென்பது காணக்கிடைக்கிறது. இம்மூவேந்தர்நாடும் கூடுமிடம் கரூர் என்பதற்கு இதனருகில் விளைந்த பெரும்போர்களே சான்றாம். ஆகையால் இந்நாடும் முக்கியமாய் அதன் மலையிடங்களும் சிற்றரசரரண்களால் நிரம்பியதாய் இப்பேரரசர்கள்வன்மைக்கும் தன்மைக்குந் தக்கபடி அடங்கியேனும் அதிர்ந்தேனும் வந்து இருபெருநாட்டெல்லைகட்கு இடைப்பட்டனவாயிருந்தன. இம்மாதிரி

யாக இருங்கோவேள்நாடு மைசூருக்கும் குடகுக்கும் மத்தியிலும் சேர வம்சத்தவனான அதிகமானஞ்சி தகடூர்நாடு அதற்கருகிற் றெற்கேயு மிருந்தன. பழநிமலையைச் சுற்றியிருந்தநாடு நல்லூர்க்கதிபதியான பேகனதாம். இதற்கும் தகடூர்நாட்டிற்கும் நடுப்பட்டது பாரியின் பறம்புநாடாகக் கொள்ளலாம். இதற்குக் கிழக்கு இக்காலத்திய சேலமும் கோயம்புத்தூரும் சேர்ந்த கொங்குநாடாகும். இதற்குச் செங்கிழக் காய்க் கீழ்சமுத்திரக்கரையருகிலுள்ளது திருக்கோவலூரான் காரியின் மலாடு. இதற்குத் தெற்குப்பட்டு வடக்குக் காஞ்சியையு முட்கொண் டது சோழநாடு. பாலைக்காட்டுக் கணவாய்க்குத் தெற்கிற்றாய் மலய மலையின் பொதியிற்குன்றைச்சுற்றிய நாடு ஆய்க்குரியதாம்; அதற்கெதிர் கிழக்காய்க் கொற்கையைச்சுற்றியது எவ்விக் குரியதாகும். செங் குட்டுவச்சேரனாட்சிக் கடைசியிற் காரியினுதவியால் ஓரியிடம்கொண்ட கொல்லிமலையினின்றும் கடற்றுறைப்பட்டினமான தொண்டிவரைக்கும் சோழபாண்டிநாட்டிற் கிடைநாடு, சேரவதிகாரியொருவ னாட்சிக் கடங்கி யிருந்தது; இவனே யானைக்கட்சேயென்பான். இத்தகைய பாகுபாடு ஓரேமாதிரியாய் நிலைபெறுமற் சிற்சிலகாலங்களிலே வேறுபட்டு மாறிக் கொண்டிருந்தனவென்பது அக்காலத்திய நூல்களினின்றே வெளிப் படும்.

இப்பொழுது நாம் கருதிய இக்காலத்தைச் சேரவுயர்வுகாலமென்று சொல்லத்தகும்; ஏனெனில், முடியுடைவேந்தர் மூவருள்ளும் இக் காலத்துச் செங்குட்டுவச்சேரனே சிறப்புற்றோங்கியுள்ளோன். இதற் குப் பிற்காலம் சேரர்க்கும் பாண்டியர்க்கும் போருண்டாய்ச் சேரவுயர்வு குலையப் பாண்டியர்களே காரணமாயினார்கள். இதினின்றும் பல்லவர் உயர்வுபெறவாரம்பித்த சுமார் கி.பி. 400வரை இத்தேயத்து நிலைமையை யறிய இயன்ற சான்று இல்லைபோலும். சமுத்திரகுப்தன் சமகாலத்தவ னான காஞ்சிவிஷ்ணுகோபன்காலத்தினின்றும் பல்லவவுயர்வாரம்பித்து, சளுக்கியர் அரசவீடான வாதாபியைச் சுமார் கி. பி. 640-ல் சுட்டெரித்த நரசிம்மவர்மன்காலத்தில் மிகத்தழைத்தோங்கியது. இதினின்றும் சுமார் 100-வருடங்களுக்குப்பின் கங்கர்க்கும் பாண்டியர்க்கும் கும்பகோணத் திற்கருகிற் சண்டைவிளைந்தது கண்டுள்ளாம். இத்தகைய செய்கை நமக்குத்தெரிந்தமட்டும் பாண்டியர்கள் செய்துள்ளார். இப்பரியாயதீபத் தின் தெற்குமுனையிலிருப்பதால் அவர்கள் நிலைகுலைவின்றி, ஏனைய அர

சர்கள் சீர்குன்றும்காலத்தெல்லாம் மேலெழுந்தவராவர். சரித்திரவாராய்ச்சியிற் கண்டமட்டும் இத்தென்றேயத்தரசர்கள் தக்கணத்தினின்று தெற்கு வரவொண்ணாதபடி எதிர்ப்பதே தொழிலாய்ப் பூண்டிருந்தனர். பல்லவர்கள் உயர்வடைந்தகாலமுதல் இத்தென்றேயத்தரசர்களின்நிலைமை ஒருவாறு தெளிவாய்ப் புலப்படும். வரகுணபாண்டியன் கங்கரைத் தன் தேயம்புக ஓட்டினான். அதற்கொருநூற்றாண்டின் பின் நவீன சோழராஜவம்சமொன்று முன்வந்து மிகச் செழிப்புற்றோங்கியகாலத்து விஜயநகர்ச் சக்கராதிபத்தியத்தின் அடைந்த விரிவைச் சோழர்கள் பெறச்செய்தனர். இச்சோழர் சீர்குன்றவே தெற்கிருந்த பாண்டியரும் வடக்கிருந்த போச்சலரும் சோணாடுபுகுந்தனர். இவ்விரு வம்சமகத்துவமும் வடக்கிருந்து படையெடுத்துவந்த மாலிக்காபொரால் அழிவுபெற்றது. இம்மகம்மதிய உயர்வை நீக்கப் பெருமுயற்சிசெய்த சிற்றரசர் அநேகர். இவர் பெருமுயற்சியெல்லாம் பதினான்காம்நூற்றாண்டில் நிலைபெற்ற விஜயநகரசக்கராதிபத்தியத்தாற் பயன்பெற்றது. இச்சக்கராதிபத்தியம் உடைந்தழியவே தென்னிந்தியாவில் இந்துக்கள் ஆட்சி முடிவுபெற்றது. ஏனெனின் மஹாராட்டிர சக்கராதிபத்தியம் நம் தேசசரித்திரத்தில் மற்றொருபாகுபாட்டிற் கிணங்கியதாம்.

முற்றும்.



# மதுரைத்தமிழ்ச்சங்கத்தில் விற்கப்பெறும் புத்தகங்கள்.

## சங்கப்பதிப்பு.

| | | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|
| 1. | ஞானாமிர்த மூலமும் உரையும் ... ... | 1 | 0 | 0 |
| 2. | சைவமஞ்சரி ... ... ... | 1 | 8 | 0 |
| 3. | யாப்பணியிலக்கணங்கள் (விசாகப்பெருமாளையர் பஞ்சலக்ஷண வினாவிடையினின்று எடுத்தவை) | 0 | 10 | 0 |
| *4. | வைத்தியசாரசங்கிரகம் ... ... | | | |
| 5. | பன்னூற்றிரட்டு ... ... ... | 2 | 0 | 0 |
| *6. | மகாபாரதம் அரும்பதவுரையுடன் ... | | | |
| *7. | தோத்திரத்திரட்டு ... ... | | | |
| 8. | தமிழ்ச்சொல்லகராதி உயிர்வருக்கம் முடிய முதற்பாகம். | 6 | 0 | 0 |
| | ஷை இரண்டாம்பாகம் ... ... ... | 4 | 8 | 0 |
| | ஷை மூன்றாம் பாகம் ... ... ... | 5 | 0 | 0 |
| 9. | அபிதானசிந்தாமணி ... ... ... | 7 | 0 | 0 |
| 10. | தொல்காப்பியம் செய்யுளியல் ... (நச்சினார்க்கினியருரை உரையாசிரியருரையுடன்) | 1 | 12 | 0 |
| 11. | திருவருணைக்கலம்பகம் ... ... ... | 0 | 4 | 0 |
| 12. | அமுதாம்பிகைபிள்ளைத்தமிழ் ... | 0 | 8 | 0 |
| *13. | கலைசைச்சிலேடைவெண்பா ... ... ... | | | |
| 14. | தொல்காப்பியப் பொருளதிகார ஆராய்ச்சி ... | 1 | 0 | 0 |
| 15. | திருவாரூர் நான்மணிமாலை ... ... ... | 0 | 3 | 0 |
| * | சங்கப்புலவராற்றுப்படை உரையுடன் ... | | | |
| | பன்னூற்றிரட்டு (செலக்ஷன்) ... ... | 0 | 4 | 0 |
| | திருவாலவாய்த் திருநீற்றுப்பதிகம் முதலியன ... | 0 | 1 | 0 |

## செந்தமிழ்ப்பிரசுரம்.

| | | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|
| 1. | ஐந்திணையைம்பது உரையுடன் ... ... | 0 | 3 | 0 |
| 2. | கனாநூல் (5) இனியநாற்பது (உரையுடன்) ... | 0 | 3 | 0 |
| *3. | வளையாபதிச்செய்யுட்கள் | | | |
| 4. | புலவராற்றுப்படை (திருக்குருகூர் இரத்தின கவிராயர் இயற்றியது.) ... ... | 0 | 3 | 0 |
| 6. | நேமிநாதம் (உரையுடன்) ... ... ... | 0 | 12 | 0 |
| *7. | திருநூற்றந்தாதி (உரையுடன்) ... | | | |
| *8. | திணைமாலை நூற்றைம்பது (உரையுடன்) | | | |
| *9. | அநுமானவிளக்கம் ... ... ... | | | |
| 10. | அட்டாங்கயோகக்குறள் ... ... | 0 | 2 | 0 |
| 11.* | விவசாயரசாயனசாஸ்திரச்சுருக்கம் ... | | | |
| 12.* | பன்னிருபாட்டியல் ... | | | |
| 13. | நான்மணிக்கடிகை (பழைய உரை) ... ... | 0 | 3 | 0 |
| 14. | முத்தொள்ளாயிரச்செய்யுட்கள் ... ... | 0 | 2 | 0 |
| 15. | திருச்செந்திற்கலம்பகம் ... ... ... | 0 | 3 | 0 |
| 16.* | திருவாரூருலா ... ... | | | |
| 17. | சுகசந்தர்சனதீபிகை ... ... ... | 0 | 12 | 0 |
| 18. | இயற்கைப்பொருட்பாடம் ... ... | 0 | 4 | 0 |
| 19. | தேவையுலா ... ... ... ... | 0 | 3 | 0 |
| 20. | நரிவிருத்தம் ... ... ... | 0 | 2 | 0 |
| 21. | சிதம்பரப்பாட்டியல் (உரையுடன்) ... ... | 0 | 6 | 0 |
| 22.* | திருக்கலம்பகம் (ஷை) ... | | | |
| 23. | விக்கிரமசோழனுலா ... ... ... | 0 | 2 | 0 |
| 24. | குருமொழிவினாவிடை ... ... ... | 0 | 1 | 0 |
| 25. | கேசவப்பெருமாள் இரட்டைமணிமாலை ... | 0 | 1 | 0 |

| | | | | |
|---|---|---|---|---|
| 26. | திருத்தணிகைத் திருவிருத்தம் ... ... | 0 | 1 | 0 |
| 27. | மதுரைத் திருப்பணிமாலை ... ... | 0 | 6 | 0 |
| 28. | சந்திராலோகம் ... ... ... | 0 | 2 | 0 |
| *29. | சோழவம்சசரித்திரச்சுருக்கம் ... | | | |
| 30. | ஞானாமிர்தக்கட்டளை ... ... ... | 0 | 3 | 0 |
| 31. | பாண்டியம் ... ... ... ... | 0 | 4 | 0 |
| 32. | மனீஷாபஞ்சகம் ... ... ... | 0 | 8 | 0 |
| 33. | வேளிர்வரலாறு ... ... ... | 0 | 8 | 0 |
| *34. | அகப்பொருள்விளக்கம் ... ... | | | |
| 35. | திருமந்திர நூறுபாட்டுக்குரை ... ... | 0 | 8 | 0 |
| 36. | உவமானசங்கிரகம் ... ... ... | 0 | 1 | 0 |
| 37. | மாறனலங்காரம் மூலமும் உரையும் ... ... | 2 | 8 | 0 |
| 38. | திருப்புல்லாணிமாலை ... ... ... | 0 | 2 | 0 |
| 39. | பழமொழிமூலமும் பழைய உரையும் ... (முதல் 100 செய்யுள்) | 1 | 0 | 0 |
| 40. | திருமாலிருஞ்சோலைமலை அழகர்பிள்ளைத்தமிழ் ... | 0 | 8 | 0 |
| 41. | பொருட்டொகைநிகண்டு ... ... | 0 | 6 | 0 |
| 42. | அகராதிநிகண்டு ... ... ... | 0 | 12 | 0 |
| 43. | மேகவிடுதூது ... ... ... | 0 | 2 | 0 |
| 44. | திருக்குற்றாலமாலை ... ... ... | 0 | 2 | 0 |
| 45. | தண்டலையார்சதகம் ... ... ... | 0 | 3 | 0 |
| 46. | இராமோதந்தம் ... ... ... | 0 | 3 | 0 |
| 47. | பழமொழிமூலமும் பழைய உரையும் ... (இரண்டாவது 100 செய்யுள்) | 1 | 0 | 0 |
| 48. | சேதுநாடும் தமிழும் ... ... | 0 | 4 | 0 |
| 49. | கடைவள்ளலார் காலம் ... ... | 0 | 6 | 0 |

## வேறுபதிப்பு.

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | சேரன் செங்குட்டுவன் ... ... ... | 1 | 0 | 0 |
| 2. | வஞ்சிமாநகர் ... ... ... | 0 | 8 | 0 |
| 3. | ஜோதிமாலை (தமிழ்நாவல்) ... ... | 0 | 4 | 0 |
| 4. | சிவஞானசுவாமிகள்மீது இரட்டைமணிமாலை ... | 0 | 1 | 0 |

* இவ்வடையாளமிடப்பட்டவை இப்போது கைவசமில்லை.

குறிப்பு:—

1. சங்கத்தினின்றும் மாதமொருமுறை அரிய பெரிய விஷயங்களைக் கொண்டு வெளியாகிவரும் "செந்தமிழ்" பத்திரிகைக்கு வருஷச்சந்தா ரூ 4—0—0 தனிப்பிரதியின் கிரயம் அணா 8. வெளிநாடுகளுக்கு வருஷச் சந்தா ரூ 4—3—0. இதுவரை 21 தொகுதிகள் பூர்த்தியாயிருக்கின்றன. இவற்றுள் 1, 3, 7, 8, 9, 10-ம் தொகுதிகள் கைவசமில்லை. பைண்டுசெய்யப்படாத கைவசமுள்ள தொகுதிகளுள் 20-ந் தொகுதிமுடிய, தொகுதி 1-க்கு ரூ 2—0—0 வீதமும், 21-வது தொகுதி ரூ 4-வீதமும் விலைக்கு விற்கப்படும். பைண்டு செய்யப்பெற்ற தொகுதிகட்கானால் ஏற்பட்ட கிரயத்துக்குமேல் அணா 12 ஆகும். வி. பி. சார்ஜ் பிரத்தியேகம்.

2. சங்கப்பிரசுரம் ஒன்றில் ஒரே தடவையில் 10 பிரதிகளும் அதற்குமேற்பட்டும் வாங்குவோர்கட்கு மொத்தக்கிரயத்தொகையில் 100க்கு 10 வீதம் கமிஷன் தள்ளிக்கொடுக்கப்படும்.

லெக்ஷ்மீநாராயணையர்,

மானேஜர்.